

# கல்கி

ராட்சஸ
ஐப்பசி 30

o

நவம்பர் 16
1975

o

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மொத்தம் ஏழு மூட்டைகள் உள்ளன. ஒவ்வொன்றின் மதிப்பும் அதில் குறிக்கப்பட்டுள்ளது. ஏதாவது நான்கு மூட்டைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கூட்டுத் தொகை குறைந்த பட்சம் 24 வர வேண்டும். நான்கே மூட்டைகளில் அதிக எண்ணிக்கையைச் சேகரிப்பவர் அதிர்ஷ்டசாலி.







கீழே உள்ள படத்தில் 'E' என்ற ஆங்கில எழுத்துக்கள் பல இறைந்து கிடக்கின்றன. மொத்தம் இங்கு எத்தனை 'E' எழுத்துக்கள் உள்ளன என்று கண்டு பிடியுங்களேன்.
(விடை: 62)



OBM 5080—TM

மீராவுக்குக் காயம் படும்போது



# நோய் தொற்றாமல் தம்மைப் பாதுகாக்க, அவர் BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்கள் திறந்திருந்தால், தொற்று நோய் பரவக்கூடும். **பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகளால் அவற்றைப் பாதுகாருங்கள்.

**பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகள் நோய்க் கிருமி தொற்றாமல் காயங்களைக் காக்கின்றன. அவற்றிலுள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக் மருந்து **மெர்க்கியூரோக்-ரோம்**, பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து ஆற்ற உதவுகிறது.

**பாண்டு-எய்ட்** பிராண்ட் டிரஸ்ஸிங்குகளைப் பயன்படுத்தி, முன்ஜாக்கிரதையுடன் இருங்கள். எப்பொழுதும் சில டிரஸ்ஸிங்குகள் கைவசம் இருக்கட்டும்.

பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகளை ஜான்ஸன் & ஜான்ஸன் மட்டுமே தயாரிக்கிறார்கள்.

*Johnson & Johnson*

மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப்பட்டது.



# தட்டிக் கேட்பவரே, தட்டிக் கொடுங்கள்!

என்ன கஷ்ட நஷ்டம் ஏற்பட்டாலும் சரி தமிழக அரசு மது விலக்கை அமுல்படுத்த வேண்டும் என்று வற்புறுத்திக் கூறிவிட்டு, இதனால் ஏற்படும் வருவாய் இழப்பை மத்திய அரசு கணிசமான அளவில் ஈடுகட்ட முன்வர வேண்டும் என்று கூறாதிருந்தால் கல்கி தன் கடமையை ஆற்றியதாகாது.

எனவே இந்த இழப்பை மத்திய அரசு கணிசமான அளவில் ஈடுகட்ட முன்வர வேண்டும் என்று மீண்டும் ஒருமுறை வலியுறுத்திச் சொல்கிறோம்.

தவறான காரியம் செய்தால் தட்டிக் கேட்கும் உரிமை பெற்றவர்கள் நல்ல காரியத்தை வரவேற்றுத் தட்டிக் கொடுக்கும் பண்பும் பெறவேண்டும். அத்துடன் நல்ல காரியம் செய்பவர்களுக்குக் கைகொடுத்து உதவவும் இயன்றவரை முயல வேண்டும். இல்லாத போனால் நற்பணிகள் போற்றுவாரின்றியும் ஆதரிப்பார் இன்றியும் நலியும்.

சட்டசபையில் பேசும்போது முதல்வர் தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிக்கான செலவு கிட்டத்தட்ட அறுபது கோடி ரூபாய் என்றும் மத்திய அரசு உதவியது ஏழு கோடிதான் என்றும் கூறியுள்ளார். இதிலும் எழுபது சதம் கடன் முப்பது சதம்தான் மானியம்.

மத்திய நிதி அமைச்சரிடம் கோபம் கொண்டு திட்டச் சொல்லினங்களுக்கு அப்பாற்பட்டதாகக் கருதிக் கொடுத்தாலொழிய மத்திய அரசின் வறட்சி நிவாரண உதவி வேண்டாம் என்று முதல்வர் கூறியதால் மத்திய அரசின் உதவி தேவையான அளவில் கிடைக்காது போயிருக்கலாம் என்று பொருள்பட எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் சட்டசபையில் பேசியிருக்கிறார்.

இதில் உண்மை இருப்பதாக ஒப்புக்கொள்வோமானால், ஏதோ ஒரு வேகத்தில் முதல்வர் பேசியதை வைத்துக் கோடிக்கணக்கான மக்களைப் பாதிக்குமாறு மத்திய அரசு நடந்து கொள்ள வேண்டுமா என்ற கேள்வி பிறக்கும். தமிழ் மக்களின் நலனில் மாநில அரசுக்கு எவ்வளவு பொறுப்புண்டோ அதே அளவுக்கு மத்திய அரசுக்கும் பொறுப்புண்டு. கவனித்து ஆவன செய்ய வேண்டும் என எதிர்பார்க்கிறோம்.

இத்தனை சிரமங்கள் இருந்தாலும் புதிய வரிகள் ஏதும் இராது என்ற முதல்வரின் அறிவிப்பைத் தேர்தலை எதிர்நோக்கிய சாணக்கியம் என்று அரசியல்வாதிகள் எண்ணலாம்; மனிதாபிமானம் என்றே பல்வேறு வரிச் சுமைகளால் ஏற்கனவே திணறிக்கொண்டிருக்கும் சாமானியன் கருதுவான்.


கல்கி

மலர் 35

இதழ் 16





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்


# மனிதாபிமானத்தை மடிய விடலாமா?

அமெரிக்க எழுத்தாளர் ஆர்ட் புக்வால்ட் எதையும் மிகைப்பட எழுதியே சிரிக்க வைப்பதில் வல்லவர்.

பங்களா தேசத்திலிருந்து அடுத்தடுத்து வரும் செய்திகளைப் படிக்கும்போது ராணுவ ஆட்சி ஏற்படுவது பற்றி ஆர்ட் புக்வால்ட் எழுதிய ஒரு கட்டுரை போல் இருக்கிறது.

ஆனால் அந்தச் செய்திகள் மிகைப்பட எழுதப்பட்டவையும் அல்ல; நம்மைச் சிரிக்க வைக்கவுமில்லை. ஆழ்ந்த துயரத்தில் ஆழ்த்துகிற அசல் உண்மைகள் அவை.

பங்களா தேசத்தின் தந்தை என்று மதிக்கப்பட்ட ஷேக் முஜிபுர் ரஹ்மான் பதவிக்கு வந்த சிறிது காலத்துக்குப் பிறகு ஜனநாயகத்துக்கு ஒவ்வாத சில பல காரியங்களைச் செய்தார் என்பது உண்மையே. ஆனால் இதனால் மக்களில் ஒருசாரார் மனம் வருந்தியிருக்கலாமே ஒழிய அவரிடம் மக்களுக்கு இருந்த மதிப்பும் மரியாதையும் குறைந்து போய்விடவில்லை.

எனவே அவரையும் அவரது குடும்பத்தினரையும் படுபாதகமான விதத்தில் கொலை செய்துவிட்டு ஆட்சியைக் கைப்பற்றியவர்




வங்க
தேசம்





அரசியல் வன்முறை





அலகாபாத்
தீர்ப்பு
இந்திய
ஜனநாயகம்
முள்
அகன்றது!

களுக்கு எதிராகச் சீக்கிரமே மீண்டும் ஒரு சதித் திட்டம் உருவாக்கப்பட்டு நிறைவேறலாம் என அரசியல் நிபுணர்கள் பலர் கருதினர். அவ்விதமே நடந்துள்ளது.

பங்களா தேச ராணுவத்தினரிலும் அதி தீவிர பாதகப் போக்கை விரும்பாத பிரிவு ஒன்று இருந்து, அந்தப் பிரிவின் கை தற்போது மேலோங்கியுள்ளது. முஜிபுர் ரஹ்மானுக்குப் பிறகு, ராணுவத்தில் உள்ள அதி தீவிரவாதிகளின் உதவியுடன் பதவி ஏற்ற முஷ்டாக் அகமது தற்போது பதவி துறந்து புதிய ஆட்சிக்குப் பணிந்து நிற்கிறார்.

இந்த ஆட்சி மாற்றத்தை அடுத்து செல்வாக்கை இழந்த ராணுவத்தின் தீவிரவாதிகள் தப்பி ஓடு முன்னர் பழிவாங்கும் படலத்தில் இறங்கினர். அவர்கள், முஜிபுர் ரஹ்மானின் சகாக்களாக முன்பு விளங்கிப் பின்னர் சிறைப்பட்ட டாஜுடீன் அஹமத், ஸயீத் நஸ்ருல் இஸ்லாம், மன்ஸூர் அலி, கமாருஸ்ஸமான் ஆகியோரைச் சிறைச்சாலையிலேயே கொன்று குவித்துவிட்டனர்.

இந்தப் படுபாதகச் செயல்கள் எல்லாம் உலகை உலுக்கிவிட்டன.

பங்களா தேசத்தில் இன்று எந்தப் பிரிவு பதவி இழந்தாலும் எந்தப் பிரிவு வெற்றி பெற்றாலும் சரி, மனிதாபிமானம் அங்கே படுதோல்வி அடைந்து விட்டது. அந்நேசத்தின் சரித்திரத்தில் அகற்ற முடியாத களங்கமாக இந்நிகழ்ச்சிகள் அமையும்.

# சென்று வாருங்கள்; வென்று திரும்புங்கள்!



மலேஷியா – சிங்கப்பூரில் வாழும் தமிழர்கள் பலர் பன்முறை கடிதங்கள் வாயிலாகவும் தமிழகம் வந்த போது நேரிலும் ஸ்ரீமதி எம். எஸ். தங்கள் நாட்டுக்கு ஒருமுறை விஜயம் செய்து கச்சேரிகள் நிகழ்த்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டதுண்டு. அவர்களது ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று ஸ்ரீ சதாசிவம் தம்பதி பல ஆண்டுகளாக எண்ணிவந்த போதிலும் அதற்கு வசதிப்படாமலேயே இருந்துவந்தது. பல நாள் கனவு இப்போது நனவாகிறது.

மட்டற்ற மகிழ்ச்சியோடு மலேசியா சிங்கப்பூர் தமிழர்களின் ஆசையை நிறைவேற்ற இம்மாதம் 14ந் தேதி பிற்பகல் 1-30க்கு ஸ்ரீ சதாசிவம் தம்பதி சென்னையிலிருந்து புறப்படுகின்றனர். புதல்வியர் ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் ஸ்ரீமதி விஜயா ராஜேந்திரனும் பக்கவாத்தியக் கலைஞர்களான கண்டதேவி அழகர்சாமி, காரைக்குடி மணி, விநாயகராம் ஆகியோரும் செல்கின்றனர்.

சிங்கப்பூரில் 16, 18 தேதிகளில் இரு கச்சேரிகள், 20ந் தேதி பினாங்கிலும் 26ந் தேதி ஐபோவிலும் நிகழ்ச்சிகள். 30ம் தேதியும் டிசம்பர் 5ந் தேதியும் மலேசியத் தலைநகர் குலாலம்பூரில் கச்சேரிகள். டிசம்பர் 7ந் தேதி மலாக்காவில் ஒரு கச்சேரி, மீண்டும் 10ந் தேதி குலாலம்பூரில் கச்சேரி. டிசம்பர் மத்தியில் தமிழகம் திரும்புகின்றனர்.

சிங்கப்பூர் பயணம் சீரும் சிறப்புமாக, மலேசியப் பயணம் மாபெரும் வெற்றியாக அமையும் என்பதில் யாருக்கும் ஐயமில்லை. அந்நாடுகளில் வசிக்கும் பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் மட்டுமின்றி மலாய்க்காரர்களும் ஆங்கிலோ இந்தியர்களும் கூட எம். எஸ். அவர்களின் இசையில் கட்டுண்டு அந்த அளவில் பாரத மக்களுடன் இதயத்தால் ஒன்றப் போகிறார்கள்.

கல்கி வாசகர்கள் சார்பிலும் கல்கி ஸ்தாபனத்தின் சார்பிலும் ஸ்ரீ சதாசிவம் தம்பதியையும் இசைக் குழுவினரையும் வாழ்த்தி விடை கொடுக்கிறோம்.

ராஜாஜி சிந்தனை

## சிக்கெனப் பிடித்தேன்!

'அசுரர்களுக்குத் துன்பம் செய்கின்ற மகாவிஷ்ணுவே' என்கிறார் ஆழ்வார்:

''**அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா!**''

''சித்தத்தை என்மயமாக்கி என் அருளைப் பெற்று இடையூறு எதையும் கடந்து செல்வாய்'' என்பது கீதையில் கண்ணன் வாக்கியம்.

நம் உள்ளத்தைப் பாபத்தில் செலுத்தும் எண்ணங்களே அசுரர்கள். அந்த அசுரர்களை, அதாவது இடையூறுகளை பகவான் அழித்து நம்மைக் காப்பான் என்பது கருத்து. உள்ளத்தில் பகவானை நிறுத்திப் பக்தி செலுத்தினோமானால் பாப எண்ணங்களுக்கும் பயத்துக்கும் அற்ப ஆசைகளுக்கும் இடம் இராது. நிலையாகச் சித்தத்தில் அவனை வைத்து நிறுத்திக் கொள்வதற்கும் அவன் அருள் வேண்டும்.

''**உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே**''

உன்னை நான் சிக்கெனப் பிடித்தேன், கொள் – இனி உன்னை விடமாட்டேன். நிச்சயமாகத் தெரிந்துகொள். நான் விட்டாலும் நீ விடமாட்டாய். நீ விடப் போனாலும் நான் விடமாட்டேன்.

**(பக்திநெறி என்ற நூலிலிருந்து)**



# புராண கைங்கர்யம் ②

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

கீர்த்தனம் என்பதில் பகவத் மஹிமையைப் பாடுவதோடு, பிரவசனம் செய்வதையும் சேர்த்துக் கொள்ளலாம். ஹரிகதா காலக்ஷேபம் பண்ணுவது, ஹரிகதை மாதிரி சங்கீதம் சேர்க்காமல் வெறுமே உபந்நியாசம் பண்ணுவது இவையும் ஒரு தினுசில் 'கீர்த்தனம்' என்பதோடு சேர்க்க வேண்டியவைதாம். பௌராணிகர் புராணம் படித்துச் சொல்வதை 'படனம்' என்றும், அதை மற்றவர்கள் கேட்பதை 'சிரவணம்' என்றும் சொல்வார்கள். பகவானின் லீலைகளைப் பாட்டாகப் பாடினாலும், உபந்நியாசமாகப் பேசினாலும், அதைக் கேட்பதுதான் 'சிரவணம்'. இங்கே நாமாகப் பிரயாசைப்பட்டு எதுவுமே செய்யவில்லை. இன்னொருத்தர் பாடுகிறார், அல்லது பேசுகிறார். அதை வெறுமனே நாம் கேட்கிறோம். இதிலே நமக்கு ஒரு சிரமமும் இல்லை. திரவியச் செலவு இல்லை; தேகத்தால் உழைப்பில்லை. மனசைச் செலுத்திக் கேட்டுக்கொண்டிருந்தால் போதும், பரம சுலபமாக பகவானுடைய மஹிமைகளைத் தெரிந்து கொண்டு அதிலேயே கரைந்து ஆனந்தமாக இருக்கலாம்.

பதினைந்து நாட்களுக்கு ஒரு தரமாவது அதாவது ஏகாதசிதோறும் இப்படி ஒரு கிராமத்தில் அல்லது பேட்டையில் இருக்கப்பட்ட சகல ஜனங்களுக்கும் ஒரு புண்ணிய சரித்திர சிரவண பாக்கியம் கிடைக்கும்படியாகப் பண்ண வேண்டும்.

நாம் சைவர்களாக இருந்தாலும் சரி, வைஷ்ணவர்களாக இருந்தாலும் சரி, அவரவர்கள் குலாசாரத்தையே பின்பற்றுவோம். ஆனால் சைவர்கள் என்பதால் விஷ்ணுவைத் தாழ்வாக நினைக்கக் கூடாது. அப்படியே வைஷ்ணவர் என்பதால் சிவனைத் தாழ்வாக எண்ணக் கூடாது. ஏதோ ஒரு காலத்தில் பெரியவர்கள் இப்படி ஒவ்வொரு ஸ்வாமிக்கு உத்கர்ஷம் (உயர்வு) காட்டித் தனித் தனி சம்பிரதாயமாக வைத்திருக்கிறார்கள். அதற்கு வந்த நெறிகளை இன்று நாம் விடவேண்டாம். ஆனால் எவருக்கும் சிவத்வேஷம், விஷ்ணுத்வேஷம் இருக்கவே கூடாது. எல்லா சம்பிரதாயங்களுக்கும் மூலம் வேதம். அந்த வேதத்தில் சிவன், விஷ்ணு இரண்டையும் ஒரே போலத்தான் ஸ்தோத்திரம் செய்திருக்கிறது. விஷ்ணு பக்தர்களாக இருக்கப்பட்டவர்கள் சிவபரமாக இத்தனை புராணங்கள், இந்தனை ஸ்தோத்திரங்கள், க்ஷேத்திரங்கள், மகான்கள் (அறுபத்து மூவரில் ஒவ்வொருவர் சரித்திரத்தையும் படித்தாலே மனசு உருகுகிறது) வந்திருப்பதெல்லாம் வீணுக்குத்தானா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். இதே போல் சைவர்களும் விஷ்ணுபரமாக ஆதி காலத்திலிருந்து வந்திருக்கிற பாகவதாதி புராண இதிஹாஸங்கள், பரம பாகவதர்களும் ஆழ்வாராதிகளும் அநுபூதி நிலையில் பாடியது எல்லாவற்றையும் பிரயோஜனம் இல்லை என்று கழித்துக் கட்டுவது சரிதானா என்று யோசிக்க வேண்டும். 'அன்பே சிவம்' என்பார்கள். விஷ்ணுவையும் பரம பாகவதர்கள் பிரேம ஸ்வரூபமாகத்தான் அநுபவித்திருக்கிறார்கள். அந்த அன்பில் நாம் எல்லோரும் ஒன்றாக வேண்டும்.

ஆகையினால் சிவ மதம், விஷ்ணு மதம் என்ற பேதமில்லாமல் எல்லோரும் ஏகாதசிகளில் ஒன்றுகூடி ஈச்வர லீலைகளையும், மகா விஷ்ணுவின் மகிமைகளையும் குறித்த புராணங்களைச் சிரவணம் செய்ய வேண்டும். இங்கே 'சிவ மதம்', விஷ்ணு மதம்' என்று சொன்னதுகூட வெள்ளைக்காரர் ராஜ்யத்தில் பத்திரம் எழுதும்போது வந்த பழக்கம்தான். அது தப்பு. உண்மையில் எல்லோரும் வேத மதம்தான். அதிலே உட்பிரிவுகள்தான் சைவம், வைஷ்ணவம் முதலானவை. சேக்கிழார் ரொம்ப அழகாக வேதத்தை ஒரு பெரிய நதியாகவும், அதிலே சைவம் வைஷ்ணவம் முதலிய பல சம்பிரதாயங்களைப் பல படித் துறைகளாகவும் சொல்லியிருக்கிறார் : ''வேத நெறி தழைத்தோங்க, மிகு சைவத் துறை விளங்க''. ஆழ்வாரும் இப்படியே ''வணங்கும் துறைகள் பலபலவாக்கி'' என்கிறார். நாம் ஒரு துறையில் ஸ்நானம் செய்கிறோம். அதனால் இந்தத் துறையில் வருவதுதான் சுத்தமான நதி; மற்ற துறைகளில் இருப்பது அசுத்த ஜலம் என்பதா ?

சிவ மதமோ, விஷ்ணு மதமோ ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு என்பதே கிடையாது. ஆகையால் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து ஈச்வரன், மகாவிஷ்ணு, அம்பாள், சுப்பிரமணியர், ராமன், கிருஷ்ணன் இப்படியாகப்பட்ட எல்லா தெய்வங்களைப் பற்றியும் இருக்கிற புராணங்களைக் கேட்டுப் பயன் பெற வேண்டும். மகான்கள், பரம பாகவதர்கள், பரம சாம்பவர்களாக இருக்கப்பட்டவர்களின் உத்தமமான சரித்திரங்களைக் கேட்க வேண்டும். இது வேண்டாம், அது வேண்டாம் என்று நாம் தள்ளிவிடுவதால் அந்தந்த ஸ்வாமிக்கு ஒரு நஷ்டமும் இல்லை. நமக்கேதான் ஆத்ம சிரேயசுக்கு ரொம்பவும் உபகாரம் செய்யக்கூடிய விஷயங்களை நஷ்டமாக்கிக் கொள்கிறோம். (தொடரும்)

(1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.)

# நேருவின் சிறை வாழ்க்கை!



**ம**னிதருள் மாணிக்கமான பண்டித ஜவாஹர்லால் நேரு தேசத்தின் விடுதலைக்காக ஒன்பது தடவை சிறை சென்றிருக்கிறார். சுமார் ஒன்பது வருடங்கள் சிறையிலேயே தம் வாழ்நாட்களைக் கழித்துள்ளார் :

டிஸம்பர் 1921 — மார்ச் 1922

பிரின்ஸ் ஆப் வேல்ஸ் இந்திய விஜயத்தின் பொழுது ஒத்துழையாமை இயக்கம் நடந்தது. நேரு ஹர்த்தால் நோட்டீஸ் விநியோகம் செய்ததற்காகக் கைது செய்யப்பட்டு ஆறு மாதம் சிறைவாசத் தண்டனை பெற்றார். ஆனால் தப்பாகத் தண்டிக்கப்பட்டார் என்று தீர்மானித்து மூன்று மாதத்திலேயே விடுதலை செய்யப்பட்டார். —**லக்னோ ஜெயில்**

ஏப்ரல் 1922 — ஜனவரி 1923

சட்டத்தை மீறிய குற்றத்துக்காகவும், ராஜத் துவேஷ காரியத்தில் ஈடுபட்டதற்காகவும் ஒரு வருடம் ஒன்பது மாதம் ஜெயில் வாசம். ஆனால் ஜனவரி 31ந் தேதி திடீரென்று விடுதலை செய்யப்பட்டார். — **லக்னோ ஜெயில்.**

செப்டம்பர் 1923

நாபா சமஸ்தானத்தில் ஒரு மத சம்பந்தமான சடங்கை நடக்க அநுமதிக்காததற்காகப் போராட்டம். திரு கே. சந்தானத்துடன் நேரு கைது செய்யப்பட்டு இருவர் கைகளையும் ஒன்று சேர்த்து விலங்கிட்டனர். பதினைந்து நாட்கள் விசாரணை. இரண்டரை வருடச் சிறைத் தண்டனை. ஆனால் உடனேயே விடுதலை செய்யப்பட்டார். —**நாபா சிறை.**

14—4—30 முதல் 11—10—30 முடிய

உப்பு சத்தியாக்கிரகத்தின்போது. ஆறு மாதம் சிறைத் தண்டனை. நைனி மத்திய சிறைச்சாலை. மகாத்மா காந்தியுடன் கலந்து ஆலோசிப்பதற்காக 10-8-30 அன்று ஏரவாடா சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். 19-8-30 அன்று திரும்பவும் நைனி சிறைச்சாலைக்கு அழைத்து வரப்பட்டார்.

19—12—30 முதல் 26—1—31 முடிய

ஐ. பி. ஸி. 144 ஷரத்தின் கீழ் கைது செய்யப்பட்டார், சட்டத்தை எதிர்த்துப் பொதுக் கூட்டத்தில் பேசினார் என்று.

தேசத் துரோகக் குற்றம்: பதினெட்டு மாத கடுங் காவலும் ரூ. ஐந்நூறு அபராதமும்.

1930ம் ஆண்டின் ஆறாவது அவசரச் சட்டத்தின் கீழ் ஆறு மாதமும் ரூபாய் நூறு அபராதமும்.

ஆனால் 26—1—31 அன்றே விடுதலை செய்யப்பட்டார்! நைனி சிறைச்சாலை.

இந்தச் சிறைச்சாலையில்தான் இந்திரா காந்திக்குத் தொடர்ச்சியாக உலக சரித்திரத்தை ''Glimpses of world history'' என்ற தலைப்பில் கடிதங்களாக எழுதினார்.

26—12—31 முதல் 30—8—33 முடிய

வரி கொடா இயக்கத்தினை யொட்டித் தண்டனை. இரண்டு வருடக் கடுங்காவலும் ரூபாய் 500 அபராதமும்.

நைனி சிறைச்சாலை — 6 மாதம்
பரேலி சிறைச்சாலை — நான்கு மாதம்
டேராடூன் சிறைச்சாலை — மீதி நாட்கள்.

12—2—34 முதல் 4—9—35 முடிய

கோபமும் மற்றும் ஆத்திரமும் மூட்டக் கூடியதெனக் கருதப்பட்ட மூன்று பேச்சுகளுக்காக இரண்டு வருட சிறைவாசம். கல்கத்தாவில் சில நாட்கள், பிறகு அலிப்பூர் ஜெயில். பிறகு 7—5—34 அன்று டேராடூன் ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டார்.

டேராடூன் சிறைச்சாலையில்தான் தம் ''சுய சரிதையை'' எழுதினார். ஜூன் 1934 முதல் பிப்ரவரி 35 முடிய எழுதினார்.

11—8—34 அன்று நோயுற்ற மனைவி கமலா நேருவைப் பார்க்க விடுதலை.

23—8—34 மறுபடியும் சிறைவாசம்.



---

மேலே : அரிய நூல்கள் பல எழுதிக் குவித்தவர் படித்துக் குவித்த அரிய நூல்களும் ஏராளம். பிரதமரின் படிப்பறை இது.

கீழே : ''இந்தியாவைக் கண்டறிவோம்'' என்று நூல் எழுதிய நேரு இங்கே சிக்கிமிலிருந்து பூடானுக்குப் போகும் பாதையில் ''யாக்'' மீது சவாரி செய்கிறார்.

**4–9–35 கமலா நேருவின் உடம்பு கவலைக் கிடமாக இருந்ததால் விடுதலை.**
**அக்டோபர் 1940 முதல் 1942 வரை.**

சாத்துவீக சட்டமறுப்பு மற்றும் சத்தியாக் கிரகத்துக்காகக் கைது செய்யப்பட்டார். நாலு வருடக் கடுங்காவல். ஆனால் 1942ம் ஆண்டின் தொடக்கத்திலேயே விடுதலை செய்யப்பட்டார். டேராடூன் ஜெயில்.

9–8–42 முதல் 10–6–1945 முடிய

''வெள்ளையனே, வெளியேறு'' ''க்விட் இந்தியா'' இயக்கத்தையொட்டிக் கைது செய்யப்பட்டார்.

இதுதான் நேருவின் கடைசியானதும், மிக நீளமானதுமான சிறைவாசம். சுமார் 1041 நாட்கள். அகமத் நகர் கோட்டையில் அடைக்கப்பட்டார். இந்தச் சிறையில்தான் – ஏப்ரல் 1944லிருந்து செப்டம்பர் 1944 முடிய நாம் அறிந்த பாரதம் பற்றி Discovery of India என்ற உலகப் புகழ்பெற்ற இந்திய வரலாற்றுப் புத்தகத்தை எழுதினார்.

28–3–45 வரை நைனி சென்ட்ரல் சிறைச் சாலை.

29–3–45 முதல் 10–6–45 வரை அல்மோரா சிறைச்சாலை.

நேருவின் சிறை வாழ்க்கை மிகவும் திட்டமிடப்பட்டு ஓர் ஒழுங்குடன் அமைந்திருந்தது. விடியற்காலையிலேயே எழுந்துவிடுவார். யோகாசனங்கள் செய்வார். நூல் நூற்பார். புஸ்தகங்களைப் படிப்பார். கடிதங்கள் எழுதுவார். மாலையில் தோட்ட வேலையில் ஈடுபடுவார். இயற்கைக் காட்சிகளை அனுபவிப்பார். டேராடூன் சிறையிலிருந்தே பனி சூழ்ந்த இமய மலையில் எழில்மிக்க காட்சிகளைக் கண்டு ரசிப்பார். இது அவருடைய சிறை வாழ்க்கையின் அலுப்பைத் தீர்ப்பதாக அமைந்தது. சிறையில் இருக்கும் பொழுது மூன்று புத்தகங்களை எழுதியுள்ளார்.

கடவுளால் படைக்கப்பட்ட தேள், பாம்பு, பூரான் மற்றும் கொசு மூட்டைப்பூச்சி போன்றவைகளுடன்கூட நேருவுக்குத் தொடர்பு ஏற்பட்டது ஜெயில் வாசத்தில்தான், அவர் கூறியது: ''நான் இந்த ஜந்துக்களின் வழிக்குச் செல்வதில்லை. ஆகையால் அவையும் என் வாழ்க்கையில் குறுக்கிடவில்லை. நாங்கள் தனித்தனியே எங்கள் வழியில் சென்றோம். பாம்பினுடைய வருகைதான் சுவாரசியமற்ற சிறை வாழ்க்கையில் கொஞ்சம் பரபரப்பு ஏற்படச் செய்தது.''

– சி. ஆர். திருவேங்கடத்தான்

---

□ கால்ஃப் ஆட்டக்காரரும் உதவியாளரும் (காடி) பந்தைத் தேடு தேடு என்று தேடி அலைந்தார்கள். கோபமடைந்த கால்ஃப் ஆட்டக்காரர் காடியிடம், ''நீ ஏன் பந்து எந்தப் பக்கம் செல்கிறது என்று பார்க்கவில்லை?'' என்று இரைந்தார்.

''என்னை மன்னிச்சுடுங்க சார்! வழக்கமாகப் பந்து ரொம்ப தூரம் போகாது! இன்னிக்கு என்னை ஒரே ஆச்சரியத்தில் மூழ்கடித்து விட்டீர்கள்!''




□ ''டார்லிங்! இன்னிக்கு கால்ஃப் ஆட்டத்தில் ஜெயித்தீர்களா?''

''முட்டாள்தனமாக உளறாதே! இன்று என் முதலாளியோடு அல்லவா கால்ஃப் ஆடினேன்!''

□ கால்ஃப் ஆட்டக்காரர் ஒரேயடியாகக் கோபமுற்றுக் காடியின் சட்டையைப் பிடித்துக்கொண்டு கத்தினார்: ''முட்டாளே! நீ இன்னொரு தடவை என் ஆட்டத்தைப் பார்த்துச் சிரித்தால் உன்னுடைய தலையில் ஒரு போடு போட்டுவிடுவேன்!''

காடி மறுபடியும் பலமாகச் சிரித்தான்: ''அதற்கு எந்தத் தடியைத் தேர்ந்தெடுக்கணும் என்று உங்களுக்குத் தெரியாதே!''

□ எதிராளி அருகிலிருக்க அவன் முதல் 'டிரைவ்' அடிக்கத் தடியை ஓங்கினான்! காற்றை அடித்தானே தவிர பந்தில் தடி படவில்லை. அவன் மறுபடியும் முயற்சி செய்து தோல்வி அடைந்தான். பிறகு சமாதானம் சொன்னான்:

''நான் வழக்கமாக விளையாடும் கால்ஃப் மைதானத்தை விட இந்த மைதானம் இரண்டு அங்குலம் தாழ்வாயிருக்கிறது!''

(மெட்ராஸ் ஜிம்கானா கிளப் வெளியிட்டுள்ள நினைவு மலரிலிருந்து திரட்டியவை.)

● ● ●

இவ்வாண்டு பம்பாய், கல்கத்தா, பெங்களூர், இலங்கை கால்ஃப் ஆட்டக்காரர்கள் முத்தையா நினைவு தங்கக் கோப்பைக்கான கால்ஃப் போட்டியில் கலந்து கொண்டார்கள்.

கல்கத்தாவைச் சேர்ந்த, ஐந்து தடவை தேசிய சாம்பியனான அசோக் மல்லிக்கும் ஜோத்பூரிலிருந்து வந்த இருபத்துநான்கு வயது இளைஞர் பி. லக்ஷ்மண் சிங்கும் சென்னையைச் சேர்ந்த அஜித் தாமஸும் தங்கக் கோப்பையை அடைய உக்ரமாக ஆடினார்கள். கடைசியில் ஒரே ஸ்ட்ரோக்கில் இளைஞர் பி. லக்ஷ்மண் சிங் தங்கக் கோப்பையைப் பெற்றார்.

-குண்டுமணி

< பி. லக்ஷ்மண் சிங்






அந்தப் பெண்ணின் துணிச்சலைப் பாராட்ட வேண்டும்!

திருமணம் நடக்க இருந்த சமயத்தில், மணமகனின் பெற்றோர், மணமகளுக்கு ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுத்தாக வேண்டும்; அப்போதுதான் கல்யாணம் நடக்கும் என்றனராம். மணமகள் துணிச்சலாக முன்வந்து, ''இத்திருமணமே வேண்டாம்!'' என்று கூறிவிட்டாள். இச்சம்பவம் இந்த மாதம் முதல் தேதி மீரட் நகரில் நடைபெற்றது. இப்படிச் செய்தவள் முஸ்லிம் பெண். இண்டர்மீடியட் வரை படித்தவள். ஆனால் அவள் திருமணம் நின்றுவிடவில்லை. அதே நாளில் வேறொரு முஸ்லிம் இளைஞன் அவளைத் திருமணம் செய்து கொண்டான். ''வாழ்க, மணமக்கள்!'' என்று வாழ்த்துகிறோம்.

வரதட்சிணைக் கொடுமை, சீர்செனத்திக் கொடுமையை ஒடுக்க மணமக்களே முன்வந்துவிட்டார்களானால் இந்நாடு நலம் பெறும்.

* * *

நடன வரிசை தபால் த[illegible]கள் பத்து லட்ச ரூபாய்க்கு விற்பனையா[illegible] உள்ளனவாம். இதற்கு முன், ''இந்திய பறவை வரிசை'' தபால் தலைகள் நான்கு லட்ச ரூபாய்க்கு விற்பனையாகியிருந்ததாம். அந்த ரிக்கார்டை மிஞ்சி விட்டது. இரண்டரை மடங்கு அதிகமாக விற்று. சபாக்களில் அடிக்கடி நடன நிகழ்ச்சிகளை நடப்பதன் ரகசியம் இப்போது புரிகிறதல்லவா? மக்களின் ருசி அப்படி!

* * *

புதுதில்லியில் நடைபெற்ற காமன்வெல்த் பாராளுமன்ற மகாநாட்டுக்கு வந்திருந்த வெளிநாட்டு விருந்தினர்களுக்கு நமது சட்னியும், மாங்காய் ஊறுகாயும், கறியும் ரொம்பவும் பிடித்துவிட்டனவாம். நமது பிரதமர், வெளிநாட்டு விருந்தினர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய உணவு வகைகளைப் பற்றித் தாமே சிரத்தை எடுத்துக் கொண்டிருந்தாராம். பிரதமரானாலும், பெண்தானே!

* * *

அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் ஜனவரி 26ம் தேதியிலிருந்து அமெரிக்காவில், நியூயார்க் நகரில் என்ஜினீயரிங் பொருட்காட்சி நடைபெறவிருக்கிறது. அதற்குப் பிறகு டெக்ஸாஸ் மாநிலத்தில் டல்லாஸ் நகரில் அதே போல் மற்றோர் என்ஜினீயரிங் பொருட்களின் ஒரு பொருட்காட்சி நடைபெறவிருக்கிறது. இவற்றில் இந்தியாவிலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட ஏற்றுமதி வர்த்தக வியாபாரிகள் பங்கு கொள்ளப் போகிறார்களாம். இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட இந்திய இன்ஜினீயரிங் பொருட்கள் காட்சிக்கு வைக்கப்படும். அமெரிக்காவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஐயாயிரத்துக்கு மேற்பட்ட வியாபாரிகள் இப்பொருட்காட்சிக்கு வருவார்களாதலால் இந்தியப் பொருட்களுக்கு நல்ல மார்க்கெட் கிடைக்கக் கூடும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

* * *

தில்லியில் நடைபெற்ற காமன்வெல்த் நாடுகளின் பாராளுமன்ற மகாநாட்டில் சிங்கப்பூர் மந்திரி திரு லியா கா ஹ[illegible]ய் பின்வருமாறு கூறினார்:

''நவீன பொறி இயல் அறிவை கடலில் கொட்டினால் லட்சக்கணக்கான பேர் பட்டினியால் செத்துப் போவார்கள்; அதே சமயம் அரசியல்வாதிகளைக் கொண்டு போய்க் கடலில் மூழ்கடித்தால் ஒருவரும் பட்டினி கிடக்க மாட்டார்கள்!''

* * *

சமீபத்தில் சென்னை புதைபொருள் ஆராய்ச்சி அலுவலகத்தில், திரு உமாகாந்த் ஷா என்பவர் இராமாயணத்தில் கூறப்படும் இலங்கை எங்கேயிருக்கிறது என்ற பொருள் பற்றி ஒரு சொற்பொழிவாற்றினார். திரு ஷா சம்ஸ்கிருத வல்லுநர், பரோடா சம்ஸ்கிருத கழகத்திலிருந்து வெளியான ஆதாரபூர்வமான வால்மீகி ராமாயணப் பதிப்பின் ஆசிரியர். மத்திய பிரதேசத்தில் உள்ள அமரகண்ட் என்ற இடம்தான் இலங்கையாக இருக்க வேண்டும் என்று சில மேற்கோள்கள் காட்டி நிருபிக்க முயன்றார். ஆனால் அவர் கூற்று ஒத்துக் கொள்ளும்படியாக இருக்கவில்லை. இதே போல் குருக்ஷேத்ரம் என்று இன்று வழங்கப்படும் பிரதேசத்தில்தான் உண்மையிலேயே மாபாரதப் போர் நடந்ததா என்பன போன்ற சர்ச்சைகளை ஆராய்ச்சியாளர் இன்றும் நடத்துகின்றனர்.

ராஜாஜி அவர்களின் எச்சரிக்கை நினைவுக்கு வருகிறது. பாரத நாட்டில் தொன்று தொட்டு இன்று வரை மக்கள், ராமனும் கிருஷ்ணனும் வடகோடியிலிருந்து தென்கோடி வரை நடந்து சென்றும் மக்களோடு இணைந்தும் தங்கள் ஆதர்ச வாழ்க்கையை நடத்தியிருப்பதாக நம்புகிறார்கள். அந்த நம்பிக்கையைத் தகர்க்கும்படியான எந்தக் காரியத்தையும் இன்றைய அறிவாளிகள் செய்வது பாரத சமுதாயத்துக்குப் பெரும் தீங்கு விளைவிக்கும் என்றார்.

**''வம்பன்''**



# இணையற்ற எழில்மேனி.
# மென்மை, வழவழப்பு, இயற்கையான வனப்பு.

ஆம்! லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி-
எழிலுக்கு மெருகூட்டுகிறது. நீங்
களே அதை உணர்ந்து மகிழ்வீர்
கள். காரணம், லக்ஸ் ஸுப்ரீம்
மட்டுமே ப்யூடி க்ரீம் உட்கொண்ட
தாகும். பெருகும் அதன்
செழுமையான நுரையில் உள்ள
ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தையும்
அதனின்று கமழும் இணையற்ற
மெய்மறக்கச் செய்யும் நறுமணத்
தையும் நீங்கள் உண்மையாகவே அனுப
விக்கமுடியும். அதன் செழுமையான
நுரை உங்களது சருமத்தைத் தழுவிச்
சென்று, மேனியைப் பட்டுப்போன்று
மிருதுவாக இயற்கை வனப்புடன்
வைக்கிறது.




வேறு எந்த சோப்பையும்
பற்றிய சிந்தனையும் எழாது.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

HLLS-8697 A

# வட்ட மேஜை

கல்கி 5-10-75 இதழில் 'சிவகாமியின் சபதம்' 35-ம் அத்தியாயத்தில் வாதாபி கணபதியின் திருவுருவம் ஓவியர் வினுவால் வரையப்பட்டுள்ளது. மேற்படி கணபதி எங்கள் திருச்செங்காட்டான் குடியில்தான் அமைந்துள்ளது. வாதாபி நகரத்திலிருந்து பரஞ்சோதியார் கொண்டு வந்து திருச்செங்காட்டாங்குடியில் பிரதிஷ்டை செய்த கணபதியின் துதிக்கை உந்திக்கமலத்தில் சுற்றிக்கொண்டிருப்பதாகவும், இரு கால்களையும் சம்மணம் கட்டிக்கொண்டு இரு கைகளை யோகநிஷ்டையில் வைத்திருப்பதாகவும் உள்ளது. விநாயகர் நிஷ்டையில் இருப்பதாகவே கருதப்படுகிறது. தாங்கள் வெளியிட்டிருக்கும் படம் தவறானதாகும்.



திருச்செங்காட்டான்குடி
4-10-75 டி.எஸ்.வி. நாகராஜன்

ஓவியர் "வினு" வரைந்துள்ளது, விநாயகரின் பொதுவான தோற்றமே.

திருச்செங்காட்டாங்குடியில் கோயில்கொண்டுள்ள வாதாபி கணபதியின் தோற்றம், ஓவியர் "சந்திரா" நேரில் பார்த்து வரைந்த வடிவில், கல்கியின் 1946 ஜூன் 23ம் தேதிய இதழில் அட்டையில் வெளியாயிற்று. "சிவகாமியின் சபதம்" முதல் தடவையாகத் தொடராக வந்துகொண்டிருந்த சமயம் அது.

இதுபற்றி மேலும் சிறிது விவரத்தை, "பொன்னியின் புதல்வர்" தொடரில், இனி வரவிருக்கும் அத்தியாயத்தில் காணலாம். - ஆசிரியர்

தங்கள் பத்திரிகையில் என் மகள் ராதா பிரியதர்ஷினி சிறுகதைகள் எழுதினது ஞாபகமிருக்கலாம்.

இன்று ராதா லண்டன் பல்கலைக் கழகத்தில் பயோ கெமிஸ்ட்ரியில் முதல் வகுப்பில் தேறிப் பட்டம் பெற்றுள்ளாள்.



இந்தக் கோடை விடுமுறையில் ஓய்வுக்காக எங்களுடன் அவள் வந்து தங்கியிருக்கும்போது லண்டன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் தாமே நேரடியாக அவளை டெலிபோனில் கூப்பிட்டு உடனே தம்மை வந்து சந்திக்கும்படி கேட்டுக் கொண்டார். இவள் மறுநாள் அவரைப் போய்ப் பார்த்ததும் அவளை உடனே பி.எச்.டி.க்குச் சேரும்படியும் இம்மியூனலஜியில் ஆராய்ச்சி செய்யும்படியும் கேட்டுக்கொண்டார். அதுமட்டுமல்ல; இந்த ஆராய்ச்சியில் அவள் ஈடுபட்டால் தாம் அவளுக்குக் கடமைப்பட்டிருப்பதாகவும் தெரிவித்துக் கொண்டார்! தற்சமயம் இந்த ஆராய்ச்சிக்கு ஓர் ஆண்டுக்கு இரண்டாயிரம் பவுண்டு கொடுப்பதாகவும், வேண்டுமென்றால் மேலும் கொடுப்பதாகவும் சொன்னார். என் மகள் என்பதற்காக அல்ல. இருபத்திரண்டு வயதான ஓர் இந்திய நங்கையின் அபாரத் திறமையைச் சுட்டிக் காட்டவும் இங்குள்ள பல்கலைக் கழகங்கள் எப்படித் திறமையைக் கண்ட இடத்தில் போற்றிப் பயன்படுத்திக் கொள்கின்றன என்பதை உணர்த்தவுமே எழுதினேன். ராதா ஒரு வயதுக் குழந்தையாயிருக்கும்போது நாங்கள் பேராசிரியர் கல்கி அவர்களைப் பார்க்கச் சென்றிருந்தோம். அவளுடன் சில நிமிஷம் கொஞ்சி விளையாடி விட்டு அவர் சொன்னார்: "உங்கள் குழந்தை உலகப் பிரசித்தி அடைவாள்" என்று.

ஆக்ஸ்ஃபோர்ட்
19-10-75 டி. ஆர். சுப்பிரமண்யம்

கல்கியில் பிரசுரமாகும் கவியரசு கண்ணதாசனின் கடைசிப் பக்கத்தைப் படித்துச் சுவைப்பதில் பெருமகிழ்ச்சி எனக்குண்டு.

சென்ற 26-10-75 தேதிய இதழில் இந்து நாகரிகம் பற்றி அற்புதமாக எழுதியிருந்தார்.

ஆனால் அதே கட்டுரையில் "வேறு எந்த மதமும் வாழ்க்கை நாகரிகத்தைப் போதித்ததில்லை; இந்து மதம் ஒன்றே போதிக்கிறது" என்ற கவியரசின் வாசகம் ஏற்கத்தக்கதல்ல.

வேறு பல மதங்களும் வாழ்க்கை நாகரிகத்தைப்பற்றி மிக அழகாகத்தான் போதிக்கின்றன.

நபிகள்நாயகத்தின் சரிதை, நபிமொழிகள், திருக்குர் ஆன் போன்ற அரிய பொக்கிஷங்களைக் கண்ணதாசன் படித்து உணர வேண்டும்.

வாழ்க்கை நாகரிகம் பற்றி இஸ்லாம் நுனி முதல் அடிவரை எவ்வளவு அழகாகச் சித்திரிக்கின்றது என்பதை அப்போது அவரால் புரிந்து கொள்ள முடியும்.

குளச்சல்
24-10-75 எஸ். நுஸ்ரத் பாத்திமா

கல்கி தீபாவளி மலரின் விலை உயர்ந்து விட்டதே என்று கவலைப்பட்டேன். ஆனாலும், மலரை வரவழைத்துப் பார்த்தவுடனேயே கவலை யெல்லாம் பறந்தோடிவிட்டது! விலை மட்டுமல்ல; கல்கி மலரின் சிறப்பும் எவ்வளவோ உயர்ந்து விட்டது. தீபாவளி என்றாலே கல்கி மலர்தான் ஒவ்வொரு வருஷமும் என் நினைவுக்கு வருகிறது. அதுவும் இந்த வருட மலர் மிக மிகச் சிறப்பாக இருக்கிறது.

முடிகண்டநல்லூர்
2-11-75 சின்னஞ்சிறு கோபு

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பவினமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

# ரஞ்சனியின் வஞ்சகம்

மூர்ச்சித்து விழுந்த சிவகாமியண்டை நாகநந்தி பாய்ந்து சென்று நெற்றியின் பொட்டுக்களிலும், மூக்கின் அருகிலும் தம் நீண்ட விரல்களை வைத்துப் பார்த்தார்.

காபாலிகையைக் கடும் கோபத்துடன் நோக்கி, ''அடி பாதகி ! என்ன காரியம் செய்துவிட்டாய் !'' என்றார்.

மயானத்தில் நள்ளிரவில் பேய்கள் பல சேர்ந்து சிரிப்பதுபோல் காபாலிகை சிரித்தாள்.

''அடிகளே! நான் என்ன பாதகத்தைச் செய்து விட்டேன்? தாங்கள் சொன்னபடிதானே செய்தேன் ? இவளுடைய காதலன் மாமல்லனை வீட்டுக்குள்ளே நுழைந்ததும் கொன்றுவிடும்படி தாங்கள்தானே சொன்னீர்கள்? அருமைக் காதலனுடைய கதியைக் கண்டு இந்தக் கற்புக்கரசி செத்து விழுந்தால் அதற்கு நான் என்ன செய்வேன்?'' என்று காபாலிகை சொல்லுவதற்குள் நாகநந்தி குறுக்கிட்டு, ''அசடே! மாமல்லன் இவன் அல்ல. மாமல்லனுடைய ரதசாரதி கண்ணபிரான் இவன் ! அரசனுக்கும் ரத சாரதிக்கும் உள்ள வித்தியாசம்கூட உனக்குத் தெரியவில்லையா ?'' என்றார்.

''ஓஹோ! அப்படியா சமாசாரம் ? 'முதலிலே மாமல்லன் பிரவேசிப்பான். அவனைக் கொன்றுவிடு!' என்று தாங்கள் சொன்னபடி செய்தேன். இப்போது இவன் மாமல்லன் இல்லை, அவனுடைய சாரதி என்கிறீர்களே!''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் வாசற்கதவை வெளியில் இருந்து தடால் தடால் என்று கோடரியால் பிளக்கும் சப்தம் கேட்கத் தொடங்கியது.

''ரஞ்சனி! போனது போகட்டும். கடைசியாக நான் கேட்கும் ஒரே ஓர் உதவியை மட்டும் செய். இந்தப் பெண்ணின் உடம்பில் இன்னும் உயிர் இருக்கிறது. கொஞ்சம் அவகாசம் இருந்தால் இவளை உயிர்ப்பித்துவிடுவேன். இவள் நம்முடைய வசத்தில் இருக்கும் வரையில் மாமல்லன் எப்படியும் இவளைத் தேடிக் கொண்டு வருவான். என்

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

னுடைய பழி நிறைவேறும் வரையில் இவள் உயிரோடு இருந்தாக வேண்டும். ஆகையால், இவளை எடுத்துக் கொண்டு நான் முன்னால் போகிறேன். அதோ பல்லவ வீரர்கள் கதவைப் பிளக்கிறார்கள். நீ சற்று நேரம் இங்கே யிருந்து அவர்களை எப்படியாவது தடுத்து நிறுத்த வேண்டும்.''

''அடிகளே! ஒருவர், இருவர் வந்தால் நான் சமாளிப்பேன். கதவைப் பிளந்து கொண்டு பலர் உள்ளே வந்தால் அவர்களையெல்லாம் நான் எப்படித் தடுத்து நிறுத்த முடியும் ?''

'' உன் சாமர்த்தியத்தையெல்லாம் இதிலேதான் காட்ட வேண்டும். நீதான் சிவகாமி என்று சொல்லு. சற்று நேரம் அவர்கள் திகைத்து நிற்பார்கள். அப்புறம் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லு! அரை நாழிகை நேரம் அவர்களைத் தடுத்து நிறுத்தி வைத்தால் போதும் !''

''ஆ! கள்ள பிக்ஷுவே! பல்லவ வீரர்கள் கையால் என்னைக்கொல்லுவிப்பதற்குப் பார்க்கிறீரா ?''

''ரஞ்சனி!'' பல்லவ வீரர்களால் நீ சாகமாட்டாய் என்று சத்தியம் செய்து கொடுக்கிறேன். உன்னைப் பைத்தியக்காரி என்று அவர்கள் விட்டு விடுவார்கள். ஒரு நாளும் அவர்களால் உனக்கு மரணம் நேராது. போ! சீக்கிரம் போ ! இந்த ஓர் உதவி எனக்கு நீ செய்! அப்புறம் உன்னை எக்காலத்திலும் மறக்கமாட்டேன்!''

அருவையும் குரோதமும் நிறைந்த கண்களால் காபாலிகை, மூர்ச்சையாய்க் கிடந்த சிவகாமியையும் புத்தபிக்ஷுவையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, வேண்டா வெறுப்பாக வாசற் பக்கம் போவதற்குத் திரும்பினாள். அவள் திரும்பி இரண்டு அடி எடுத்து வைத்



தானோ இல்லையோ, புத்தபிக்ஷு" கண் மூடித் திறக்கும் நேரத்தில் தம் இடுப்பில் செருகியிருந்த விஷக் கத்தியைக் கையில் எடுத்தார். அவருடைய கையின் சக்தியையெல்லாம் பிரயோகித்துக் காபாலிகையின் முதுகில் அந்தக் கத்தியைச் செலுத்தினார்.

''ஓ!'' என்று அலறிக் கொண்டு காபாலிகை திரும்பினாள்.

''அடபாவி! சண்டாளா! கடைசியில் துரோகம் செய்துவிட்டாயா?'' என்று கத்திக் கொண்டு ரஞ்சனி நாக நந்தி மேல் பாய்ந்தாள். அவர் சட்டென்று விலகிக் கொள்ளவே, தலைகுப்புறக் கீழே விழுந்தாள்.

மின்னல் மின்னி மறையும் நேரத்தில் நாகநந்தி தரையில் மூர்ச்சையாகிக் கிடந்த சிவகாமியைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வீட்டின் பின்புறத்தை நோக்கி விரைந்தார்.

* * *

**கா**ல வெள்ளத்தில் சிறிது பின்னுக்குச் சென்று, கண்ணபிரான் அந்தத் துர்க்கதிக்கு ஆளானதும் எப்படி என்று கவனிப்போம். பலபலவென்று கிழக்கு வெளுக்கும் நேரத்தில், வாதாபிக் கோட்டைக்குள்ளே, அதன் பிரதான மேற்கு வாசல் வழியாகப் பிரவேசித்த சேனாதிபதி பரஞ்சோதி, கோதண்டத்திலிருந்து விடுபட்ட ராம பாணத்தைப் போல் நேரில் சிவகாமி இருந்த மாளிகையை நோக்கிச் செல்ல விரும்பினார். ஆனால், அது அவ்வளவு சுலபமான காரியமாயில்லை. நாற்புறமும் தீப்பட்டு எரிந்து கொண்டிருந்த அந்த மாநகரத்தின் மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டும் அழுது புலம்பிக் கொண்டும் அங்குமிங்கும் பித்துப் பிடித்தவர்கள் போல் ஓடிக் கொண்டும் இருந்தார்கள். கோட்டை மதில் மேலாக ஆங்காங்கு ஏறிக் குதித்து





நகரத்துக்குள் புகுந்த பல்லவ பாண்டிய வீரர்கள் வாதாபியின் பெருஞ் செல்வத்தைக் கொள்ளையடிக்கும் வெறியினால் மதம் பிடித்தவர்களாய்த் தங்களைத் தடுத்தவர்களையெல்லாம் கொன்று வீழ்த்திக் கொண்டு அங்குமிங்கும் ஓடினார்கள். தீப்பிடித்த வீடுகளின் மேற்கூரைகள் தட தடவென்று விழுந்து வீதிகளை அடைத்தன. தீயும் புகையும் படலம் படலமாகக் காற்றில் சுழன்று நாற்புறமும் பரவின.

இத்தகைய இடையூறுகளையெல்லாம் தாண்டிக் கொண்டு சேனாதிபதி பரஞ்சோதி வாதாபி வீதிகளின் வழியாகச் செல்ல வேண்டியிருந்தது. ஒன்பது வருஷத்துக்கு முன்னால் அந்த நகரின் வீதிகளின் வழியாகச் சிவகாமியின் வீட்டுக்குச் சென்ற ஞாபகத்தைக் கொண்டு சுலபமாக இப்போது வழி கண்டு பிடித்துச் செல்லலாம் என்று அவர் எதிர்பார்த்தார். அதுவும் அப்போது நகரில் ஏற்பட்டிருந்த குழப்பத்தினால் அவ்வளவு சுலபமாயில்லை. அவர் பின்னோடு ரதம் ஓட்டிக் கொண்டு வந்த கண்ணபிரானையும் அடிக்கடி வழி சரிதானா என்று கேட்டுக் கொள்ள வேண்டியதாயிருந்தது.

கடைசியாகச் சிவகாமியின் மாளிகை இருந்த வீதியைச் சேனாதிபதி அடைந்த சமயம் சூரியோதயம் ஆகிவிட்டது. அந்த வீதி முனைக்கு வந்தபோது ஒரு பெருங் கூட்டம் அங்கிருந்து பெயர்ந்து செல்வதை அவர் பார்த்தார். ரிஷபக் கொடியுடன் கூடிய பல்லவ வீரர்களின் வருகையைக் கண்டதும் எதிரில் வந்த ஜனங்கள் பீதியடைந்து நாற்புறமும் சிதறி ஓடினார்கள்.

சிவகாமி இருந்த மாளிகை வாசலைப் பரஞ்சோதி அடைந்ததும், அந்த வாசலும் வீதியும் நிர்மானுஷ்யமாயிருப்பதைக் கண்டார். அந்தக் காட்சி அவருடைய உள்ளத்தில் ஒருவிதத் திகிலை உண்டாக்கியது. வீட்டின் வெளிக் கதவு சாத்தியிருந்தது. வீட்டுக்குள்ளேயோ நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

யாருக்காக, யாருடைய சபதத்தை நிறைவேற்றி அழைத்துச் செல்வதற்காக, இவ்வளவு பெரும் பிரயத்தனம் செய்து படையெடுத்து வந்தோமோ, அந்த ஆயனச் சிற்பியின் மகள் இந்த வீட்டுக்குள்ளே பத்திரமாயிருக்கிறாளா? அவளை உயிரோடு மீட்டுக் கொண்டு போய்க் கோட்டை வாசலில் காத்துக் கொண்டிருக்கும் ஆயனரிடம் ஒப்புவிக்கும் பாக்கியம் கிடைக்குமா? இப்படிச் சேனாதிபதி பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போது வீதியின் எதிர்ப்புறத்திலிருந்து சில பல்லவ வீரர்கள் ரிஷபக் கொடியுடன் விரைந்து குதிரை மேல் வருவது தெரிந்தது. அவர்கள் தமக்குத்தான் ஏதோ முக்கியமான செய்தி கொண்டு வருகிறார்கள் என்று பரஞ்சோதி ஊகித்துக் கொண்டு, பக்கத்தில் ரதத்திலிருந்து இறங்கி நின்ற கண்ணபிரானைப் பார்த்து, "கண்ணா! கதவைத் தட்டு! கதவு திறந்ததும் உள்ளே சென்று தேவியிடம் நாம்தான் வந்திருக்கிறோம் அவரை அழைத்துப் போவதற்கு என்று சொல்லு!" என்றார்.

அவ்விதமே கண்ணன் போய்க் கதவைத் தட்டினான். சிறிது நேரத்துக்கெல்லாம் கதவின் திட்டி வாசல் திறந்து கொண்டது. கண்ணன் உள்ளே பிரவேசித்ததும் மறுபடியும் கதவு சாத்திக் கொண்டது.

அவசரமாக வந்த பல்லவ வீரர்களின் தலைவன் பரஞ்சோதி எதிர்பார்த்தது போலவே அவருக்கு ஒரு செய்தி கொண்டு வந்தான். செய்தி அனுப்பியவன் இலங்கை இளவரசன் மானவன்மன். சேனாதிபதியின் கட்டளைப்படி மானவன்மன் பொறுக்கி எடுத்த வீரர்களுடன் வடக்குக் கோட்டை வாசல் வழியாகப் பிரவேசித்து வாதாபி அரண்மனையை அடைந்தான். அரண்மனையில் தீப்பிடிப்பதற்குள்ளே அதனுள்ளே இருந்த விலை மதிப்பதற்கரிய செல்வங்களையெல்லாம் வெளியேற்றி விட ஏற்பாடு செய்தான். ஆனால், அரண்மனைக்குள்ளும் வெளியிலும் எவ்வளவு தேடியும் வாதாபிச் சக்கரவர்த்தி அகப்படவில்லை. அரண்மனைக் காவலர்களை விசாரித்ததில், சக்கரவர்த்தி கடைசியாக அரண்மனை வாசலில் சளுக்க வீரர்களையெல்லாம் சேர்த்து எல்லாரையும் எப்படியாவது உயிர் தப்பிப் பிழைத்து நாசிகாபுரிக்கு வந்து சேரும்படி சொல்லிவிட்டுத் தாம் ஒரு சில வீரர்களுடன் தெற்குக் கோட்டை வாசலை நோக்கிச் சென்றதாகத் தெரிந்தது. ஆனால், தெற்குக் கோட்டை வாசலைக் கைப் பற்றிக் காவல் புரிந்த

# டாக்டர்கள் கூறுகிறார்கள், 3 மாதங்கள் ஆனவுடன் உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை ஒரு திட உணவு– பாரெக்ஸ்.




**இதோ, வளரும் உங்கள் குழந்தைக்கு பாரெக்ஸ் வழங்கும் நன்மைகள்:**

- [illegible]
- [illegible]
- [illegible]
- [illegible]

**வளர்ந்துவரும் உங்கள் குழந்தைக்குத் தேவையான பாரெக்ஸ் அளவு**

| உங்கள் குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3-6 மாதங்கள் | 1-2 தேக்கரண்டி-தினசரி இருமுறை |
| 6-9 மாதங்கள் | 3-4 தேக்கரண்டி-தினசரி மும்முறை |
| 9 மாதங்கள்-1 வயது | 4-6 தேக்கரண்டி-தினசரி நான்கு முறை |






## பாரெக்ஸ்

சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தையின் முதலாவது திட உணவு—3 மாதங்கள் ஆனபின்

[illegible]

க்ளாக்ஸோ

CMGF-47 203. TM

வாழ்க்கையில் சந்தோஷமளிக்கும் பல தருணங்கள் ஏற்படுகின்றன

# தலைவலி உங்கள் சந்தோஷத்தை கெடுக்க விடாதீர்கள்

## 2 ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்




ASPRO
Nicholas

மைக்ரோ-ஃபைன் ஆஸ்ப்ரோ வலியை அதிவேகமாக வெளியே இழுத்து விடுகிறது

A.G 62 TM

பல்லவ வீரர்கள் அந்த வழியாகச் சக்கரவர்த்தி வெளியேறவில்லை என்று உறுதியாகச் சொன்னார்கள்.

இதையெல்லாம் கேட்ட சேனாதிபதிக்கு மனக் கிலேசம் முன்னைவிட அதிகமாயிற்று. வாதாபிச் சக்கரவர்த்தியாக வேஷம் பூண்டு நடித்தவர் நாகநந்திதான் என்பதை அவர் சத்ருக்னன் மூலம் தெரிந்து கொண்டிருந்தார் அல்லவா? விஷப் பாம்பைவிடக் கொடிய அந்தப் பாதகன் ஒரு வேளை சிவகாமியின் மூலமாகப் பல்லவர் மீது பழி தீர்த்துக் கொள்ள முயற்சி செய்யலாம் அல்லவா? இந்த நிமிஷத்தில் ஒரு வேளை அந்தக் கள்ள பிக்ஷு சிவகாமியைத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறானோ என்னவோ? அவளை யாரும் கண்டு பிடிக்க முடியாத இடத்தில் ஒளிக்கப் பார்க்கிறானோ, என்னவோ?

இந்த மாதிரி எண்ணங்கள் நெஞ்சத்தில் குமுறிக் கொந்தளிக்க, பரஞ்சோதி அந்த வீட்டின் வாசற் கதவை விரைந்து நெருங்கினார். அவர் கதவண்டை வந்த சமயம் உள்ளே எங்கேயோ யிருந்து 'வீல்' என்று ஒரு பெண்ணின் சோகக் குரல் கேட்டது.

பரஞ்சோதி வெறி பிடித்தவர்போல் ஆகித் தம்முடைய பலம் முழுவதையும் பிரயோகித்துக் கதவைத் தள்ளித் திறக்க முயன்றார். அது முடியாமற் போகவே, ''சீக்கிரம் கோடரி கொண்டு வந்து பிளவுங்கள்!'' என்று கர்ஜித்தார். மறுகணமே ஐந்தாறு வீரர்கள் கையில் கோடரியுடன் வந்து கதவைப் பிளந்தார்கள். ஐந்து நிமிஷத்தில் கதவுகள் பிளந்து தடாரென்று விழுந்தன.

திறந்த வாசலின் வழியாகப் பரஞ்சோதி உட்புகுந்து ஓடினார். அவரைத் தொடர்ந்து வேறு சில வீரர்களும் சென்றார்கள். முன்கட்டு முழுவதும் தேடியும் ஒருவரும் அகப்படவில்லை. பின்கட்டுக்குச் சென்றதும், ஓர் ஆணும் பெண்ணும் குத்திக் கொல்லப்பட்டுத் தரையிலே கிடந்த கோரமான காட்சி பரஞ்சோதியின் கண் முன்னால் காணப்பட்டது. ஆண் உருவத்தின் முகத்தைப் பார்த்ததும் கண்ணபிரான் என்று தெரிந்து போயிற்று. ஐயோ! கமலியின் கணவன் கதி இப்படியா ஆகவேண்டும்? ஆனால், அதைப் பற்றி அதிகம் சிந்திக்க அப்போது நேரம் இல்லை. அருகில் கிடந்த ஸ்திரீயின் மீது கவனம் சென்றது. அந்த உடல் குப்புறக் கிடந்தபடியால் யார் என்று தெரியவில்லை. ஒரு வேளை சிவகாமி தேவிதானோ என்னவோ! இருவரையும் கொன்றுவிட்டு அந்தப் பாதகன்......?



பரஞ்சோதி தாம் இன்னது செய்கிறோம் என்று தெரியாமலே அந்தப் பெண் உடலைப் புரட்டி மல்லாக்க நிமிர்த்திப் போட்டார். காபாலிகையின் கோர முகத்தைப் பார்த்ததும், 'சிவகாமி தேவி இல்லை' என்ற எண்ணத்தினால் சிறிது ஆறுதல் ஏற்பட்டது.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த ஸ்திரீயின் உடம்பு சிறிது அசைவதையும் நெடிய பெருமூச்சு விடுவதையும் கண்டு பரஞ்சோதி திடுக்கிட்டார்.

அடுத்த நிமிஷம் அவளுடைய செக்கச் சிவந்த கண்கள் பரஞ்சோதியை வெறித்து நோக்கின.

''ஆகா! மாமல்லன் நீதானா?'' என்று அவளுடைய உதடுகள் முணுமுணுத்தன.

சிவகாமியைப் பற்றி அவளிடம் ஏதேனும் தெரிந்துகொள்ளலாம் என்ற ஆவலால் எழுந்த பரபரப்புடன், ''ஆம், பெண்ணே! நான் மாமல்லன்தான்! நீ யார்? சிவகாமி தேவி எங்கே?'' என்று சேனாதிபதி கேட்டார்.

''இது என்ன கேள்வி? நான்தான் சிவகாமி, தெரியவில்லையா?'' என்றாள் காபாலிகை. அப்போது அவள் முகத்தில் தோன்றிய கோரப் புன்னகை அவளுடைய விகாரத்தைப் பன்மடங்காக்கிற்று.

ஒரு கண நேரம் பரஞ்சோதி திகைத்துப் போனார். நெடுங் காலம் சிறைப்பட்டிருந்த காரணத்தினால் சிவகாமி தேவிதான் இவ்விதம் சித்தப் பிரமை கொண்ட பித்தியாகிவிட்டாளோ?.... சீச்சீ! ஒரு நாளும் அப்படி இராது. குண்டோதரன் ஒரு மாதத்துக்கு முன்புதான் சிவகாமியைப் பார்த்துவிட்டு வந்தான் என்பதும், சத்ருக்னன் காபாலிகையைப் பற்றிக் கூறியதும் பரஞ்சோதிக்கு நினைவு வந்தன. அந்தக் காபாலிகைதான் குகை வழியாகப் பிரவேசித்து இவ்விடம் வந்திருக்கிறாள் போலும்!

''சீ! ஏன் பொய் சொல்லுகிறாய்? நீ சிவகாமி இல்லை. சிவகாமி எங்கே என்று உண்மையைச் சொன்னால்....''

''உண்மையை நான் சொன்னால் அதற்குப் பிரதியாக நீ எனக்கு என்ன செய்வாய் ?''

''உன் உயிரைக் காப்பாற்றுவேன்'' என்றார் பரஞ்சோதி.

''ஆகா! விஷக் கத்தி பாய்ந்த என்னைக் காப்பாற்ற உன்னால் ஒரு நாளும் ஆகாது !''

''விஷக் கத்தியா? அப்படியானால் நாகநந்திதான் உன்னைக் கொன்றிருக்க வேண்டும் ! பெண்ணே ! சீக்கிரம் சொல்! நாகநந்தி எப்படி, எந்த வழியாகப் போனான்? சொன்னால் உனக்காக அவனைப் பழி வாங்குகிறேன்.''

''நாகநந்தி மேல் பழி வாங்கி என்ன பிரயோசனம் ! அந்தக் கள்ள பிக்ஷு என்னைக் கொன்றது உண்மைதான். ஆனால், அவனாகக் கொல்லவில்லை. அந்த நீலி சிவகாமி தூண்டித்தான் கொன்றான்! பல்லவனே ! நீ உன்னை மன்மதன் என்றுதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால், என்ன செய்வது ? அந்த மூளி சிவகாமிக்கு உன் பேரில் ஆசை இல்லை. வறண்டு காய்ந்து எலும்பும் தோலுமாயிருந்த புத்த பிக்ஷு பேரிலேதான் அவளுக்கு மோகம். நீ வருவதாகத் தெரிந்ததும் அவள்தான் நாகநந்தியை அழைத்துக் கொண்டு ஓடிவிட்டாள். நான் குறுக்கே நிற்பேன் என்று என்னையும் கொல்லச் செய்தாள். எனக்காக நீ பழி வாங்குவதாக இருந்தால் சிவகாமியைப் பழி வாங்கு. அந்த அசட்டுப் புத்தபிக்ஷுவை ஒன்றும் செய்யாதே !''

இந்த வார்த்தைகள் எல்லாம் பரஞ்சோதியின் காதில் கர்ணகடூரமாக விழுந்தன. மேலே கேட்கச் சகியாமல் ''பெண்ணே ! அவர்கள் இருவரும் எங்கே இப்போது ? எப்படிப் போனார்கள்? சீக்கிரம் சொல்லு !'' என்று கூவினார்.

தன்னுடைய யுக்தி பலித்துவிட்டது என்று எண்ணிய காபாலிகை, ''கொல்லை முற்றத்துக் கிணற்றிலே இறங்கிப் பார்! சுரங்க வழி அங்கே இருக்கிறது! சிவகாமியைப் பழி வாங்கு! ஞாபகம் இருக்கட்டும்'' என்று சொல்லிப் பேச்சை நிறுத்தினாள். அதோடு அவளுடைய மூச்சும் நின்றது. (தொடரும்)

---

# ஒருவர் கேள்வி; பலர் பதில்!

'அறியாமை என்பதென்ன?'

''அறியாமை இரகசியத்தின் தாய் ; துன்பத்தின் பிறப்பிடம் ; குருட்டு நம்பிக்கையின் அன்னை; அழிவும் வறுமையும் வாழும் தாயகம்.'' - இங்கர்சால்

✖

'' வீரன் யார் ?''

''உண்மையான பலசாலி, மனிதர்களை வீழ்த்துபவன் அல்ல. வீரன் என்பவன் தன் கோபத்தை வெற்றி கண்டவன்தான்.'' - முகமது நபி

✖

'' நீண்ட நாள் விருந்தாளியை எவ்வாறு சமாளிப்பது?''

''உங்கள் குடும்பத்தில் ஒருவரைப் போல நடத்த ஆரம்பியுங்கள். மறு நாள் கிளம்பி விடுவார் ஊருக்கு.'' - பாப்ஹோப்

✖

'' எண்ணங்களை மாற்றிக் கொள்ளாதவர்கள் யார் ?''

''முட்டாள்களும், செத்த பிணமும்தான் தம் எண்ணத்தை மாற்றிக் கொள்வதே இல்லை.'' - லோவல்

✖

'கலை என்பது என்ன ?'

''கலை என்பது கடந்த காலத்தின் கன்னி. நிகழ்காலத்தின் மனைவி. வருங்காலத்தின் தாய்'' - காண்டேகர்

தொகுப்பு: தூரிகை





கண்ணதாசன்
எழுதும்
மகோன்னத
சரித்திர
நவீனம்
சேரமான் காதலி
இந்தக் கதை ஆரம்பமாவதை யொட்டி சந்தாதாரர்களுக்கு விசேஷப் பரிசு அறிவிப்பை இவ்விதழின் வேறு ஒரு பக்கத்தில் காணலாம்
கல்கி
டிசம்பர் 7
இதழில்
ஆரம்பம்

# இன்பத் தென்றல்

குல்ஷன் நந்தா

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

## 8

குளிர்கால விடுமுறைக்காகக் கல்லூரி சாத்தப்பட்ட இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம் ஹாஸ்டல் வெறிச்சோடிவிட்டது. மாணவிகள் பலரும் தங்கள் தங்கள் ஊருக்குப் போய்விட்டார்கள். மடல் அவிழ்த்து மணம் பரப்பும் மலர்களையும், இசை பாடி இனிய சூழலைப் படைக்கும் பறவைகளையும் நிகர்த்த இளம் பெண்கள் வெளியேறிவிடவே, ஹாஸ்டல் கட்டிடமே கடிக்க வருகிறாற் போலிருந்தது: போதாக்குறைக்குக் கடும் பனிக் காற்று வேறு சேர்ந்து கொண்டது.

முழு ஹாஸ்டலிலும் மூன்றே மூன்று பெண்கள்தான் எஞ்சியிருந்தனர். ரூபா, நிஷி — ரோஸ்லீன் — இவர்கள் விடுமுறையை அங்கேயே கழிப்பதாக முடிவு எடுத்தவர்கள். போகாத பொழுதைப் பிடித்துத் தள்ளுவதற்காகச் சில சில்லுண்டி வேலைகளைத் தாங்களாகவே முன்வந்து மேற்கொண்டனர். ஆயினும் மனத்தைப் பலவந்தமாகக் கட்டிப் போடுவது என்பது நடக்கக் கூடிய காரியமா? அலுப்பும் சலிப்பும் அவர்களை எந்நேரமும் ஆட்கொண்டன. நிஷியும் ரோஸ்லீனும் எப்பொழுதாவது கடை கண்ணிக்குப் போய் வருவார்கள். ஆனால் ரூபா, 'தான் உண்டு, தன் வேலை உண்டு' என்று ஹாஸ்டலிலேயே அடைந்து கிடப்பாள். ரோஸ்லீன் அவளைக் காட்டிலும் வயதில் பெரியவள். நிஷியின் விருப்பு வெறுப்புக்களோ வேறாக இருந்தன. எனவே, ரூபாவுக்கு இரண்டு பேரிடமுமே ஒத்துக் கொள்ளவில்லை. அவள் தனித்து விடப்பட்டதற்கு இதுவும் ஒரு காரணம்.

அன்று அவர்கள் இருவரும் சினிமாவுக்கு வேறு போய்விடவே, ரூபா ஹாஸ்டலில் தனித்து விடப்பட்டாள். பொழுதைப் போக்கப் புத்தகம் படித்தாள். படிப்பும் அலுக்கவே, ஸிஸ்டர் தெரெஸாவின் அறைக்குச் சென்றாள். ஜுரத்துக்குப் பிறகு தெரெஸா மிகவும் சோர்ந்து போயிருந்தாள். டாக்டர் அவளைக் கட்டாயமாக ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறி யிருந்தார். அதனால் ரூபா தானே வலியச் சென்று அவளுக்குப் பணிவிடை செய்து வந்தாள். இந்தப் பணி ஒருவகையில் அவளுக்கு மகிழ்ச்சியைத் தந்தது. பொழுதுக்குப் பொழுதும் போயிற்று: பணிக்குப் பணியாகவும் அமைந்தது.

''இந்தாருங்கள், இந்த மருந்தைச் சாப்பிடுங்கள்!'' டாக்டர் சொன்னபடி குறித்த நேரத்துக்கு ரூபா பாட்டிலிலிருந்து மருந்தைக் கோப்பையில் அளவாக ஊற்றி வார்டனிடம் நீட்டினாள்.

ஸிஸ்டர் தெரெஸா அவளது பணியில் மகிழ்ந்து, அவள் மீது அன்புப் பார்வையைப் படர விட்டு வாழ்த்தினாள். ''உன் அம்மா ரொம்ப அதிர்ஷ்டக்காரி! உன்னைப் போன்ற மகளைப் பெறுவதற்கு அவள் எத்தனை புண்ணியம் செய்தாளோ?'' என்றாள்.

''ஆனால் நான்தான் அதிர்ஷ்டக்கட்டை. அம்மாவுக்குப் பணி செய்து கொண்டு அவள் அருகில் இருக்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே!'' ரூபாவின் குரலில் ஆதங்கம் தெறித்தது.

''பாவம், உன்மீது அவள் எத்தனை உயிராயிருக்கிறாள், தெரியுமா? 'அவள் படும் துன்பங்களின் நிழல்கூட உன்மீது படக் கூடாதாம். உன் படிப்பு அரைகுறையாக நின்று விடக் கூடாதாம். எப்பொழுது பார்த்தாலும் இந்தக் கவலைதான் அவளுக்கு!''

''ஆனால் நான் எந்த நேரமும் அவளுக்கு அளித்தது துன்பமும் துயரமும்தான். நான் மட்டும் இல்லையென்றால், அவள் ஜனங்களின் வசவுகளையும், இட்டுக்களையும் ஏன் கேட்கப் போகிறாள்? உடல் நிலை சரியில்லையென்றாலும் நாலு வீடுகளுக்குச் சென்று ஓடியாடி வேலை செய்கிறாளே! எல்லாம் எனக்காகத்தானே!''

ஸிஸ்டர் தெரெஸா மருந்து அருந்திய வண்ணம் அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''நான் முடிவு செய்து விட்டேன்!'' ரூபா தொடர்ந்தாள்: ''பி. ஏ. பரீட்சையில் தேறியதும் அம்மாவை அழைத்துக்கொண்டு தொலை தூரத்துக்குப் போய்விடுவதாக இருக்கிறேன்!''

''என்ன சொல்லுகிறாய் நீ?''

''ஆமாம், ஸிஸ்டர்! நான் வேலை செய்வேன். அவள் சுகமாக உட்கார்ந்து சாப்பிட வேண்டும்! எந்த வேலையும் செய்யக்கூடாது!''

''ஆனால் உன் அம்மா உன்னைப் பற்றி வேறுவிதமாக அல்லவா நினைத்துக்கொண்டிருக்கிறாள்!''

''ஏனென்றால் அவள் ஓர் அம்மா, தன் பொறுப்பை உணர்ந்தவள். அதனால் அப்படிச் சொல்லலாம். ஆனால் நான் கல்யாணம் கில்யாணம் என்ற சுழலில் மாட்டிக்கொள்ளப் போவதில்லை. நான் யாருக்கும் அடிமையாகப் போவதில்லை!''

அவள் பேச்சைக் கேட்டு ஸிஸ்டர் தெரெஸா இலேசாகச் சிரித்தாள். பிறகு படுக்கைக்கு அருகில் இருந்த தேர்வுத் தாள்களின் கட்டை எடுத்து ரூபாவினிடம் கொடுத்து, ''இதை அலுவலகத்துக்கு எடுத்துச் சென்று என் அலமாரியில் வைத்து விட்டு, நீ போய் ஓய்வு எடுத்துக் கொள்!'' என்றாள்.

ரூபா தேர்வுத் தாள்களின் கட்டை எடுத்துக்கொண்டு புறப்பட்டாள். அதைக் கண்ட ஸிஸ்டர் தெரெஸா தலையணைக்கு அடியிலிருந்து சாவிக் கொத்தை எடுத்தவாறே, ''ஆமாம்' சாவியை வாங்கிக் கொள்ளாமல் போனாயானால் அலமாரியை எப்படித் திறப்பாயாம்?'' என்று கேட்டாள்.

''ஸாரி, ஸிஸ்டர்!'' ரூபா சாவிக்கொத்தை வாங்கிக்கொண்டு புறப்பட்டாள்.

''வேறு ஏதாவது வேண்டுமா?''

''வேண்டாம், ஸிஸ்டர்! எனக்கு ஓய்வு கூட வேண்டாம்!''

''ஏன்?''

''சும்மா உட்கார்ந்திருந்தால் 'போர்' அடிக்கிறது!''

''அப்படியானால் என்ன செய்கிறாய்?''

''உங்கள் அலுவலக அறையைத் துப்புரவு செய்கிறேனே!''

''செய்யேன்! வலிய ஒருத்தி வேலை செய்கிறேன் என்றால் யார்தான் வேண்டாம் என்பார்கள்!'' ஸிஸ்டர் தெரெஸா அவளைப் பரிவோடு பார்த்து விடை தந்தாள்.

ரூபா அலுவலக அறையைச் சுத்தம் செய்துவிட்டு அங்கிருந்த ஒவ்வொரு பொருளையும் துடைத்துத் தூசி தும்பட்டையைப் போக்கி அழகாக அடுக்கி வைத்தாள். வாடின மலர்களை எடுத்துப் போட்டுவிட்டுப் புதிய மலர்களைப் பறித்து வந்து பூந்தொட்டியில் வைத்தாள்.

அறை ஏகமாகக் குளிரவே, ஹீட்டரைப் போட்டுக் கொண்டாள். சிறிது நேரம் கைகளுக்குச் சூடு காட்டியவாறே குளிர் காய்ந்தாள். பிறகு அந்த அறையின் நாற்புறமும் பார்வையை ஓட்டிப் பார்த்தாள். ஏதோ யோசித்தவாறே ஸிஸ்டர் தெரெஸா அமரும் மெத்தை தைத்த சுழல் நாற்காலியில் போய் அமர்ந்து கொண்டாள். அவள் பார்வை மேஜை மீதிருந்த மூக்குக் கண்ணாடியின் மேல் விழுந்தது. அதை எடுத்துத் தன் மூக்கில் அணிந்து கொண்டாள். நாற்காலியை மெதுவாகச் சுழற்றியவாறே அறையிலுள்ள ஒவ்வொரு பொருளையும் உன்னிப்பாகக் கவனித்தாள்.

ஒரு நிமிஷத்தில் அவள் தன்னையே அந்த நாற்காலிக்கு உரிமையாளராக எண்ணி அகமகிழ்ந்து போனாள். அந்த மகிழ்ச்சிக் கிறக்கத்தில் அவள் தேர்வுத் தாள்களை எடுத்து வைத்துக் கொண்டு, கையில் சிவப்புப் பென்சிலோடு காட்சி தந்தாள். அவளே கூடத் திருத்தி விடுவாள் போலிருந்தது, அவள் உட்கார்ந்திருந்த காட்சி!

திடீரென்று வெளியே யாரோ வருவது போன்ற நடையொலி கேட்கவே, ஸிஸ்டரைப் போலவே தலை தூக்காமல், ''எஸ் கம் இன்!'' என்றாள். குரல் மென்று ஒலித்ததால் தெரெஸாவிடம் காணப்படும் அந்த அதிகார தோரணைதான் தொனிக்கவில்லை.

அனுமதியோடு உள்ளே நுழைந்தவன் அவள் மேஜையெதிரே வந்தான்!

''ஸிட் டவுன்!'' தேர்வுத்தாளைத் திருத்தும் மும்முரத்தில் அவள் குனிந்த தலை குனிந்தபடியே கூறினாள்.

வந்தவன் நாற்காலியில் அமர்ந்தான்.

''வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?'' என்று கேட்டாள் ரூபா!

''வேறு ஒன்றும் வேண்டாம். தங்கள் அருள் பார்வைதான் வேண்டும்!''

''வாட்? அருள்...?'' ரூபா எரிச்சலுடன் நிமிர்ந்தாள். எதிரே அநூப் அமர்ந்திருப்பதைக் கண்டதும் வியப்பில் விதிர் விதிர்த்து விட்டாள். அந்தப் பதற்றத்தில் மூக்கிலிருந்த கண்ணாடி நழுவிக் கீழே விழுந்து உடைந்தும் போயிற்று. அறையில் ஹீட்டரின் சூடு விரவியிருந்த போதிலும் அவள் உடல் வெட வெடவென்று நடுங்கலாயிற்று. அவள்





### கம்ப்யூட்டர் கிண்டல்

இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டு (டெலிபோனில்): சார்! உங்களுக்கு ஒரு பாலிஸி எடுக்கிற விஷயமா உங்களை எப்பப் பார்க்க வரலாம்?
குரல்: எப்ப வேணு வாங்க!
இ. ஏ.: ஸாரி, ராங் நம்பர்!

— உஷா.

**கோஸ்லா குளோஸ் ஆகவில்லை!**

"என்னைப் பற்றிக் கட்டுரையில் குறிப்பிடும்போது, காலஞ்சென்ற டாக்டர் ஏ. என். கோஸ்லா என்று எழுதி யிருந்தது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்." இப்படிக்கு,

ஏ. என். கோஸ்லா
புது டெல்லி
இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி கடிதம்
26-10-75

- பாலி

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மிகச் சிரமப்பட்டுத் தன்னை எப்படியோ சமாளித்துக்கொண்டாள். "ஆமாம், நீங்கள் யாரைப் பார்க்கணும்?" என்று கேட்டாள்.

"உங்களைத்தான்!"

"என்னையா? எதற்கு?"

"பிரின்ஸ் ரூபாவைச் சந்திக்க விரும்பினால், அதற்கு ஒருகாரணம் வேறு வேண்டுமா?"

"ஆனால் நீங்கள் மிஸ்டர் அநூப் அல்லவா?"

நேற்று வரை அநூப்தான். ஆனால் இன்று முதல் பிரின்ஸ்; அதுவும் உங்கள் பிரின்ஸ்! யுவர்ஸ் ஒன்லி!" அநூப்பின் உதடுகளில் இனிய இளநகை மின்னியது.

ரூபா அவனையே விழி பிதுங்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். என்ன விந்தையான சூழ்நிலை! யாராவது திடுதிப்பென்று வந்து விட்டால்...? பூசை வேளையில் கரடி புகுந்த கதையாகி விடுமே! — அச்சத்தில் அவளுக்கு வியர்த்து விறுவிறுத்து விட்டது. கால்களுக்கு அடியிலிருந்த தரை நழுவுகிறாற்போல் தோன்றியது. கீழே விழுந்து உடைந்து போன கண்ணாடியை எடுக்க வேண்டும் என்று கூட அவளுக்குத் தோன்றவில்லை. நிமிஷத்துக்கு நிமிஷம் ரத்தம் கண்டி அவள் உடலே வெளிறிப் போயிற்று.

"ஆமாம், எதற்காக இப்படி நடுங்குகிறீர்கள்?" அநூப் அவளுடைய மனநிலையைப் புரிந்து கொண்டே கேட்டான்.

"நானா? நடுங்குகிறேனா? இல்லையே!" குரலிலும் நடுக்கத்தைக் கொட்டித்தான் அவள் பேசினாள்.

"கண்ணாடி உடைந்து விட்டதே என்று பயப்படுகிறீர்களா?" என்று கேட்டவண்ணம் குனிந்து கண்ணாடியைக் கையில் எடுத்துக் கொண்டான். "உடைந்த இந்தக் கண்ணாடியை மாற்றி விடலாம். ஆனால்..." என்றவன் சற்று நிறுத்தி ரூபாவின் உள்ளத்தில் புகுந்து பார்க்க முற்பட்டான். பிறகு தன் மார்பின் மீது கையை வைத்து "மனம் ஒரு முறை உடைந்து விட்டால், அதை மாற்றுதல் அரிது" என்றான்.

"நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?" ரூபா துணிவைத் தருவித்துக் கொண்டு கேட்டாள்.

"இன்று நான் எதுவும் சொல்ல வரவில்லை. கேட்க வந்திருக்கிறேன்!"

"உங்களுக்கு வெட்கம் — மானம் சூடு சொரணை என்றால் என்னவென்று தெரியாதோ?"

"தெரியும். ஆனால் இன்றைய உலகத்தில் வெட்கப்பட்டால் கட்டி வராதே. என்ன செய்வது?" என்றான் அநூப்.

"நீங்கள் இங்கிருந்து போகிறீர்களா?— இல்லை..." ரூபா போட்ட கூச்சல் அறை முழுவதும் எதிரொலித்து அடங்கியது.

அந்த நேரம் பார்த்து ஸிஸ்டர் தெரெஸா அங்கு வரவே ரூபாவின் உதடுகள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக் கொண்டன.

ஸிஸ்டர் தெரெஸா முதலில் நாற்காலியில் உட்கார்ந்திருந்த இளைஞனை உற்றுப் பார்த்தாள். அப்புறம் ரூபாவைப் பார்த்து, "இதெல்லாம் என்ன?" என்று பல பொருள் தொனிக்கக் கேட்டாள்.

அவளுடைய அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல அநூப் ரூபாவை முந்திக்கொண்டான். "உண்மையைக் கேட்டால் இவருக்கு என் மேல் கோபம்!" என்றான்.

ஸிஸ்டர் தெரெஸா இருவரையும் எரிச்சலுடன் பார்த்தாள்.

"இவர் அர்த்தமில்லாமல்..."ரூபா ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதை வெட்டினான் அநூப். "என்னோடு சண்டைக்கு வருகிறார் என்றுதானே கூறப் போகிறீர்கள்?" என்றவன்; ஸிஸ்டர் தெரெஸாவைப் பார்த்து, "இவர்மேல் ஒரு குற்றமும் இல்லை. பார்க்காமல் தவறிப் போய் நான்தான் நாற்காலியில் உட்கார்ந்து விட்டேன். கண்ணாடி உடைந்து போய் விட்டது!" என்றான். சொன்ன கையோடு உடைந்த மூக்குக் கண்ணாடியை மேஜையின் மேல் வைத்தான்.

"ஆமாம், ஸிஸ்டர்! இதில் என் தவறு ஏதும் இல்லை." கண்ணாடி உடைந்து போனதால் ஸிஸ்டர் தெரெஸாவின் முகத்தில் தோன்றி மறையும் உணர்வுகளைப் பார்த்த ரூபா பரபரப்புடன் தற்காப்புக் குரல் கொடுத்தாள்.

"ஆனால் இந்தக் கண்ணாடி மேஜையின் மேல் அல்லவா இருந்தது? எப்படி உடைந்தது?" கண்ணாடியை எடுத்துச் சோதித்தவாறே கேட்டாள் ஸிஸ்டர் தெரெஸா.

"மேஜையைத் துடைக்கும்போது இவர் கண்ணாடியை எடுத்து நாற்காலியில் வைத்திருக்கலாம் அல்லவா?" அநூப் அறியாதவன் போல் கேட்டான்.

"ஆமாம், நீங்கள் யார்? நன்றாக வக்காலத்து வாங்கிப் பேசுகிறீர்களே!" என்று கேட்டாள் ஸிஸ்டர் தெரெஸா.

"என் பெயர் அநூப்!"

"இங்கு என்ன அலுவலாக வந்தீர்கள்?"

"ஒரு தகவல் தேவைப்பட்டது,வந்தேன்!"

"எதைப் பற்றி?"
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~


சத்துமிகுந்த, சுவையான
பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்
B
R
I
T
A
N
N
I
A
Glaxo
BISCUITS
BRITANNIA
Glaxo
BISCUITS
வளரும் குழந்தைகளுக்கு
சுவையான துணை
பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.
பிரிட்டானியா
பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை
லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

வாழ்க்கையில் சுயமாக வளம் பெறும் ஆடவர் இவர்...

...அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார்!




நிச்சயமாக, மபத்லால் குரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

## பெரியாரின் பண்பு

"சிதம்பரத்தில் ஒரு கோவிலில் இராமாயணக் கதையைத் தொடர்ச்சியாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். கடைசி நாள் பட்டாபிஷேகம். அதே தினத்தில் அந்த ஊரில் ராமர் பட எரிப்புப் போராட்டம் ஏற்பாடாகி யிருந்தது. மாலை ஆறு மணி. ஒரு பெரிய ஊர்வலம் அட்டையில் ராமர் உருவம் வரைந்து அதற்குத் 'தகுந்த மரியாதை'களுடன் எடுத்துப் போய்க் கொண்டிருந்தது. நான் கதை சொல்லும் கோவில் வழியாக அந்த ஊர்வலம் சென்றது. பெரியார் ஈ. வே. ரா. ஒரு பல்லக்கில் அமர்ந்து கொண்டு ஊர்வலத்தில் நடுநாயகமாக வந்து கொண்டிருந்தார். கோவிலில் கதை கேட்க வந்திருந்தவர்களுக்கு ஒரே பயம். 'என்ன நடக்குமோ ஏது நடக்குமோ' என்று கிலி. நான் கோவிலுக்கு எதிர் வீட்டு மாடியிலிருந்து ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பெரியார் கோவிலுக்கு எதிரே வந்ததும், "இங்கு என்ன விசேஷம்?" என்று விசாரித்தார்.

"இராமாயணக் கதை நடக்கிறது; இன்று பட்டாபிஷேகம்" என்று பக்கத்திலிருந்தவர்கள் பதிலளித்தார்கள். "கதை சொல்பவர் யார்?" என்பது பெரியாரின் அடுத்த கேள்வி. என் பெயரைச் சொல்லியிருக்கிறார்கள். ஊர்வலம் நகர்ந்து கோவிலுக்குப் பக்கத்தில் உள்ள பொட்டலை அடைந்தது. அங்குதான் பொதுக் கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. நாற்பது, ஐம்பது ஒலி பெருக்கிகள் எல்லாத் திசைகளையும் நோக்கி வைக்கப்பட்டிருந்தன. அவை அலற ஆரம்பித்தால் சொல்லும் கதை யார் காதிலும் விழாது. அந்தச் சமயத்தில் பெரியார் ஓர் ஆளை அனுப்பி, "கதை எத்தனை மணிக்கு முடியும்?" என்று கேட்டனுப்பினார்கள். "ஒன்பதரை மணியாகும்" என்று சொன்னேன். "அப்படியானால் முதலில் கதையை முடித்துவிடுங்கள். பின்பு என் நிகழ்ச்சியைத் தொடங்குகிறேன்" என்று மறுபடியும் சொல்லி அனுப்பினார்கள். அதே மாதிரி நான் பட்டாபிஷேகத்தை முடிக்கும்வரை அந்தக் கூட்டம் தொடங்கவில்லை. அதன் பிறகு அந்த வழியாகப் பத்து மணி பஸ்ஸில் நான் வேறூருக்குப் போய்க் கொண்டிருக்கும்போதுதான் அவர் நிகழ்ச்சியைத் தொடங்குவது என் காதில் விழுந்தது!

"தம் கொள்கையைப் பரப்புவதில், மற்றவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் பார்த்துக் கொள்வது பெரியாரின் பண்பு."

ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் கூறக் கேட்டவர்: எம். எஸ்.

oooooooooooooooooooooooooooooooooooooooo

"என் ஸிஸ்டர் இந்தப் பள்ளியில் படித்தாளாம்."

"இது பள்ளி இல்லை, கல்லூரி!"

"ஸாரி! தவறுதலுக்கு வருந்துகிறேன். இந்தக் கல்லூரியில் படித்தாளாம்!"

"இருக்கலாம். ஆனால் இப்பொழுது விடுமுறையாயிற்றே?"

"அப்படியானால் நான் நம்பிக்கை இழந்து திரும்ப வேண்டியதுதானா?"

"நீங்கள் என்ன தெரிந்து கொண்டு போக வந்தீர்கள்?"

"அவள் வகுப்புத் தோழிகளுடன் ஒரு குரூப் போட்டோ எடுக்கப்பட்டதாம்."

"இருக்கலாம். அப்பொழுதே அவள் ஒரு பிரதி வாங்கிக் கொண்டிருந்திருக்கலாமே!"

"வாங்கிக் கொண்டதுதான் காணாமற் போய்விட்டதாம்!"

"அதற்கு நாங்கள் என்ன செய்யமுடியும்?"

"என்ன விலையானாலும் பரவாயில்லை. இன்னொரு பிரதி வேண்டும்."

"பிரதி வேண்டுமானால் புகைப்படக்காரரிடம் அல்லவா போக வேண்டும்?"

"அவருடைய முகவரி உங்களிடம் இருக்கலாமே! கிடைத்தால் தாருங்கள். அவரிடமே போய்ப் பார்க்கிறேன்!"

"உங்கள் சகோதரி எந்த ஆண்டு இங்கே படித்தாள்?"

"ஐம்பத்தேழு — ஐம்பத்தெட்டு!"

"ஓ மை காட்! அத்தனை பழசா? பதினேழு பதினெட்டு ஆண்டுகளுக்கு முந்திய புகைப் படம் கிடைப்பது ரொம்பச் சிரமம்!"

"சிரமத்தைச் சுலபமாக்குவது உங்கள் போன்றவர் செயலல்லவா?"

"நீங்கள் ரொம்பப் பிடிவாதக்காரராக இருக்கிறீர்கள்" என்று கூறிய வண்ணம் ஸிஸ்டர் தெரேஸா நாற்காலியில் அமர்ந்தாள். அநூப்பை அவள் பார்த்த பார்வையில் அவன் கிறுக்கனாக இருப்பானோ என்று அவள் ஐயப்படுவதாகத் தோன்றியது.

அநூப் ஒன்றும் பேசத் தோன்றாமல் ரூபாவைப் பார்த்தான். இந்தத் தர்மசங்கடத்திலிருந்து எப்படி விடுபடுவது என்று புரியாமல் அவள் தடுமாறிக் கொண்டிருக்கிறாள் என்பதைக் கண்டபோது அவனே தடுமாறினான்.

"சரி, நீங்கள் உங்கள் பெயரையும் முகவரியையும் தந்துவிட்டுப் போங்கள். புகைப் படம் கிடைத்தால் தபாலில் அனுப்பி வைக்கிறோம்!" ஸிஸ்டர் தெரேஸா அவனிடமிருந்து தப்ப அந்த நேரத்துக்கு ஏதோ சொல்லி வைத்தாள்.

(தொடரும்)

# வெல்லுங்கள்!

- கெல்வினேட்டர் 286-லிட்டர் ஃபிரிஜ்
- ஸ்பென்ஸர்ஸ் இரும்பு பீரோக்கள்
- ரூ. 100 மதிப்புள்ள பரிசுக் கூப்பன்கள்

## ஸ்பென்ஸர்ஸ்
## பரிசுக் களஞ்சியம்

நுழைவுக் கட்டணம் கிடையாது!

உங்களுக்கு அருகாமையிலுள்ள கடையிலிருந்து ஸ்பென்ஸர்ஸ் ரெட் பாண்ட் அல்லது கிரீன் லேபல் டீ 500 கிராம் பாக்கெட் வாங்குங்கள். அத்துடன் பரிசுக் களஞ்சியத்திற்கான ஃபாரத்தையும் வாங்குங்கள். அதைப் படித்து, பூர்த்தி செய்து, அத்துடன் நீங்கள் வாங்கிய டீ பாக்கெட்டின் முகப்பை — அதாவது பரிசுக் களஞ்சியத்திற்கான லேபல் ஒட்டப்பட்ட பகுதியை முழுவதுமாகக் கத்தரித்து ஃபாரத்துடன் இணைத்து, கொடுக்கப்பட்டிருக்கும் முகவரிக்கு அனுப்புங்கள்.

இது மிகவும் சுலபம் — பிடித்தமானதும் கூட — ஸ்பென்ஸர்ஸ் டீயைப் பருகும்போது ஏற்படும் குஷியைப் போல!

உடனே முந்துங்கள். பரிசுக் களஞ்சியம் 1975 டிசம்பர் 31ம் தேதி வரைதான் உங்களுக்காகத் திறந்திருக்கும்!

இன்பமாகப் பருகுங்கள்!

மேலும் ஒரு தனிப்பரிசு: ரூபாய் 1000

முதல் பரிசைத் தட்டிக் கொள்பவர் எந்தக் கடைக்காரரிடம் டீ பாக்கெட்டை வாங்கினாரோ, அவருக்கு!

## வெற்றியை எப்போதும் தேடித் தருவது ஸ்பென்ஸர்ஸ் டீ

ஸ்பென்ஸர்ஸ் டீ, தனது தனித்தன்மையான திருப்தி அளிக்கும் சுவை, மணம் ஆகியவற்றால் பல லட்சக் கணக்கான இந்தியர் மற்றும் வெளிநாட்டவர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டுள்ளது. இதுவரை நீங்கள் ஸ்பென்ஸர்ஸ் டீயைச் சுவைத்திராவிடில், வெற்றியுடன் ஆரம்பிக்க இதுவே ஏற்ற தருணம்!







இந்தப் போட்டி சென்னை, திருச்சி, மதுரை, பெங்களூர், மங்களூர், ஹூப்ளி, பெல்காம், ஹைதராபாத், செகந்தராபாத் மற்றும் கோவா ஆகிய நகரங்களுக்கு மட்டுமே.

# பல்லாண்டு வாழ்க!

இது கண்ணைக் கவரும் ஒரு வண்ண ஓவியம். அஸ்திவார மூலக் கதை ஹிந்தித் திரையுலக மேதை வி. சாந்தாராம் அவர்களின் ''தோ ஆங்கேன் பாரஹ் ஹாத்'' என்னும் லட்சியப் படம். ஆறு பயங்கரக் குற்றவாளிகளைச் சிறைக் காவலிலிருந்து விடுவித்துத் தனியே அழைத்துச் சென்று அவர்களை நல்ல மனிதர்களாக்க முயன்ற ஒரு நல்ல மனிதனின் கதை. சாந்தாராமின் கதாநாயகன் . தனது லட்சியபூர்த்தியின்போது இறந்துவிடுகிறான்; படத்தில் காதல், கீதல் எதுவும் கிடையாது. ஓர் அநாதைப் பெண் வருகிறாள்; தன் மனத்தைக் கதாநாயகன் பால் செலுத்துகிறாள்; அவன் இறந்ததும் நெற்றிப் பொட்டை அழித்துக் கொண்டு விதவையாகிறாள். ஆனால் .'வாத்தியார்' படத்தில் கதாநாயகன் காலமாவதை ரசிகர்கள் சகித்துக் கொண்டிருப்பார்களா ? ஆகவே கதாநாயகன் சாகவில்லை. மாற்றம் அந்தமட்டில்தான். நல்லவேளை கதாநாயகன் காதலிப்பதாகச் சேர்க்கவில்லை. கடமை, கட்டுப்பாடு, கண்ணியம், லட்சியம், அஹிம்சை ஆகியவைதாம் இருக்கின்றன.

'எம். ஜி. ஆர். படத்தில் காதல் இல்லையா ?' என்று வியப்போடு ரசிகர்கள் ஏகோபித்துக் கேட்பது காதில் விழுகிறது. நிறைய இருக்கிறது. போதும் போதும் என்னும் அளவுக்கு இருக்கிறது. ஆனால் எல்லாம் கனவுக் காட்சிகள் ! (கனவினால் பயன் இல்லை என்கிறார்களே! கனவு என்று ஒன்று இல்லையென்றால் தமிழ்ப் படத் தயாரிப்பாளர் கதி என்னவது !)

மூலக் கதையைச் சிதைக்காமல் மையமாக வைத்துக் கொண்டு எம். ஜி. ஆர். படத்துக்குத் தேவையான பலப் பல சண்டைக் காட்சிகள், உயர் பண்பை விளக்கும் பல நிகழ்ச்சிகள் புனைந்து சேர்க்கப்பட்டிருக்கின்றன. எல்லாக் காட்சிகளிலும் எம். ஜி. ஆர். சிறிதும் ஏமாற்றம் தரவில்லை; கறுகறுப்பாகச் சக்கைப் போடு போட்டிருக்கிறார். கவர்ச்சிக் கன்னியான லதாவுக்கு இந்தப் பாத்திரத்தில் நடிக்கச் சொல்லித் தர வேண்டுமா என்ன ? ஜமாய்த்துத் தள்ளிவிட்டார். படத்தில் ஆறு பயங்கரக் குற்றவாளிகள் வந்தும், எம். ஜி. ஆர். — லதா இருவரைத் தவிர யாரும் மனத்தில் நிற்கவில்லை. ஆனால் இன்னும் ஒருவரைச் சேர்த்துக் கொள்ளலாம். அவர் தான், போலீஸ் மேல் அதிகாரியாக வரும் வி. கோபாலகிருஷ்ணன். சில காட்சிகளில் மட்டுமே வந்தாலும், பதவிக்கேற்ற மிடுக்குடன் மிகவும் நன்றாக நடித்திருக்கிறார்.

உதயம் புரொடக்ஷன்ஸாரின் இவ்வண்ணப் படத்தில் பாராட்டுக்குரிய அம்சங்கள்— ஒளிப்பதிவு; செவிக்கினிய பாடல்கள். மூலக் கதை, வி. சாந்தாராமின் ''தோ ஆங்கேன் பாரஹ் ஹாத்'' என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டிருப்பது தமிழ்ப்பட உலகில் ஒரு புதுமை !

— காந்தன்





# பொன்னியின் புதல்வர்

1.

## பழைமையும் புதினமும்

சுந்தா

### வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் - ஒரு சொல்லும் ஆயிரம் !

"பார்த்திபன் கனவு" கல்கிப் பத்திரிகையின் முதலாண்டு ஆறாவது இதழில் ஆரம்பமாகி, பதினைந்து இதழ்களில் தொடர்ந்து, 1943 இறுதியில் புத்தகமாய் வெளிவந்தது. அதற்கு முன்னுரை வழங்கிய, சென்னைப் பல்கலைக் கழக தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் எஸ். வையாபுரிப் பிள்ளை, "அற்புதச் சரித்திர நவீனம்" (Historical Romance) என அதை இனப்படுத்தி வர்ணித்தார். அந்த முன்னுரையில் மேலும் அவர் சொன்னார் :

இவ்வகை நவீனங்கள் தமிழில் இதுவரை தோன்றாததற்குக் காரணம் இவற்றிற்குரிய நிகழ்ச்சிகள் தேச சரித்திரத்தில் இல்லாமையன்று. தக்க ஆசிரியர்கள் இம்முறையில் தலையிடாமையே காரணம். இங்கு வெளியிடப்படும் நவீனகத்தை வாசிப்பவர்களுக்கு, பல வகையாலும் தகுதியுடைய ஓராசிரியர் இப்போது தோன்றியுள்ளமை எளிதில் புலனாகும்.

பழைமையைப் புதினத்தில், புதுமைத் தமிழில் படைத்தளிக்கும் முதல் முயற்சியில் ஒரு தமிழறிஞரிடமிருந்து கல்கிக்குக் கிடைத்த ஒப்புதல் இது. இத்துடன், சரித்திர அறிஞர் ஒருவரிடமிருந்தும் ஒப்புதல் கிடைத்தது. அதைப் பற்றி, "சிவகாமியின் சபதம்" இரண்டாம் பதிப்பின் நன்றியுரையில் கல்கியே சொல்லியிருக்கிறார் :

"பார்த்திபன் கனவு" என்னும் கதை புத்தக வடிவில் வெளியான சில நாளைக்குப் பிறகு எனக்கு ஒரு கடிதம் வந்தது. எழுதியவர் பேராசிரியர் கே. வி. ரங்கசாமி ஐயங்கார் அவர்கள். திருவனந்தபுரம் கலாசாலையிலும், காசி சர்வகலாசாலையிலும், திருப்பதி ஓரியண்டல் கலாசாலையிலும் தலைமைப் பேராசிரியர் பதவி வகித்துப் புகழ்பெற்ற ஸ்ரீ கே. வி. ரங்கசாமி ஐயங்கார் அவர்களைப் பற்றி நான் நன்கு அறிந்திருந்தேன். சரித்திரம், பொருளாதாரம், நீதி சாஸ்திரம் ஆகியவற்றில் நிகரில்லாப் புகழ் வாய்ந்த நிபுணர் என்று அறிந்திருந்தேன். அவர்களிடமிருந்து பாராட்டுரை பெற்றபோது, பார்த்திபனுடைய புதல்வன் விக்கிரமன் சுதந்திரச் சோழ நாட்டுச் சிம்மாசனம் ஏறியபோது அடைந்த மகிழ்ச்சியை நானும் அடைந்தேன்.

அந்தக் கடிதம் இப்போது இல்லை. ஆனாலும், அதில் அந்தச் சரித்திர அறி

- கல்கியின் சொல்வண்ணத்துக்குத் தம் கைவண்ணத்தால் துணை செய்த மணியம்.
- கல்கியின் முதல் சரித்திர நாவலுக்கு முன்னுரை வழங்கிய வையாபுரிப் பிள்ளை.
- நந்திபுரத்துநாயகி என்ற தமது சரித்திர நாவலைக் கல்கிக்குக் காணிக்கையாக்கிய விக்கிரமன்.
- கல்கி சரித்திர நாவல்களை எழுதப் பெரிதும் பயன்பட்ட நூல்களை எழுதிய கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, சதாசிவ பண்டாரத்தார்.
- பண்டாரத்தார்புத்தகத்தில் 'கல்கி'யின் குறிப்புகள்.







ஞர் என்ன எழுதி இருப்பார் என்பதை, ''சிவகாமியின் சபதம்'' இரண்டாம் பதிப்புக்கு அவர் வழங்கிய ஆங்கில முன்னுரையின் தொடக்கப் பகுதியிலிருந்து ஊகிக்கலாம் :

''பார்த்திபன் கனவு'' நாவலைப் படித்ததும், சரித்திரப் புனைவு இலக்கியம் என்ற வானில், ஒளி மிக்க தாரகை ஒன்று உதித்துள்ளது என்பதை உணர்ந்தேன். ஆங்கிலத்தில் நூற்றுக்கணக்கான வரலாற்று நாவல்களைப் படித்திருக்கிறேன்; அதன் மூலம், இவ்வகை இலக்கியத்தின் சிறந்த படைப்புக்களில் என்னென்ன அம்சங்கள் அமைந்திருக்க வேண்டும் என்பதை ஓரளவு அறிந்துள்ளேன். அவற்றில் பல அம்சங்கள், கல்கியின் இந்த நாவலில் பொருந்தியுள்ளன. புகழ்மிக்க தென்னிந்திய அரச குலம் ஒன்றின் தொன்மையான வரலாற்றையும், அது நிகழ்ந்த நாட்டையும் பின்னணியாய்க் கொண்டு, சுவையானதொரு கதை புனையப்பட்டது, எனக்குத் தெரிந்தவரை, இதுவே முதல் நடவையாகும்.

பேராசிரியர் ரங்கசாமியின் முன்னுரை வெறும் முகப்பு அலங்காரமானதோ, உபசாரமானதோ அல்ல; பத்தொன்பது பக்கங்களில் விரிந்துள்ள அது, குறிப்பாகச் ''சிவகாமியின் சபதம்'' பற்றியதும், பொதுவாகச் சரித்திர நாவல் இலக்கியம் பற்றியதுமான ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையே ஆகும். தமது நன்றியுரையில் கல்கி மேலும் கூறியுள்ளது போல், அப்பேராசிரியர், ''சரித்திரக் கதை எப்படி அமைய வேண்டும் என்பது பற்றிய ஓர் அற்புத ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதிவிட்டார்கள். தனி நூலாகவே வெளியிடத் தகுதி வாய்ந்த இம்முன்னுரை, வருங்காலத்தில் தமிழில் சரித்திரக் கதைகள் எழுதப்போகிறவர்கள் எல்லோருக்கும் வழிகாட்டியாக அமைந்திருக்கிறது.''

சரித்திர நாவல்களுக்கு ஓர் இலக்கணமாய் அந்தக் கட்டுரையைக் கொள்ளலாம் என்ருல், ஓர் உதாரண இலக்கியமாய் எதைக் கொள்ளலாம் என்பதை, வரலாற்று நாவல்கள் எழுதியவரும் பன்மொழிப் புலவருமான ''ஹஸன்'' (ஸையத் முஹம்மத்) தெரிவிக்கிருர்:

சரித்திர நாவல் எழுத விரும்பும் எழுத்தாளருக்கு நான் கூறும் யோசனை இதுதான். அதாவது, சரித்திர நாவல் எழுத முயல்வதற்கு முன்பாக, கல்கி எழுதிய ''சிவகாமியின் சபதம்'' என்னும் நாவலைப் பல முறை படித்துப் பாருங்கள். சிறந்த சரித்திர நாவல் ஒன்றுக்கு இருக்க வேண்டிய நல்ல அம்சங்கள் அனைத்தும் அதில் நிரம்பியுள்ளன. எனவே, அதை ஒரு முன்மாதிரியாகக் கொண்டு உங்களுடைய முதல் சரித்திர நாவலை நீங்கள் எழுதத் தொடங்கலாம்.

இவ்வாறு ''ஹஸன்'' யோசனை சொல்லியிருப்பது, ''எப்படி எழுதுவது ?'' என்ற புத்தகத்தில் அவர் எழுதியுள்ள கட்டுரை ஒன்றில். கே. ஆர். கல்யாணராமன் (மகரம்) தொகுத்து, 1969ல் வெளியான அந்தப் புத்தகத்தில் உள்ள இன்னொரு கட்டுரையில், சமூக நாவல்களுடன் சரித்திர நாவல்களும் எழுதிப் புகழ் கொண்டுள்ள ஜெகசிற்பியனும் தமது கருத்துக்களைத் தெரிவித்துள்ளார் :

தமிழில், சரித்திர நாவல் இலக்கியத்தின் தோற்ற — வளர்ச்சி காலம் மிகக் குறை



வானதுதான். ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றை அடிப்படையாய்க் கொண்டு தமிழில் எழுதப்படும் வரலாற்று நவீனங்களின் தோற்றக் காலம் சுமார் இருபது, இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு உட்பட்டது என்பது ஒரு நகைச்சுவையான விஷயமே !

கல்கி அவர்கள் தமிழ் இலக்கியத்தில் தொடங்கி வைத்த புதுப் பகுதி இது. அவருடைய பிரவேசமும் அவரது சரித்திர நாவல் படைப்புக்களும்தாம் புத்திபூர்வமாக ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருப்பதாலேயே அவரை இதன் மூல புருஷராகக் குறிப்பிடுகிறேன்.

ஆனால் ஒன்று : 'கல்கி அவர்களுக்குப்பின் சரித்திர நாவல்கள் இலக்கியத் தரம் வாய்ந்ததாக வளர்ச்சி பெறவில்லை; அவரோடு அந்தத் துறை தேங்கி நிற்கிறது' என்ற ஒரு பேச்சு இங்கே பொதுவாக அடிபடுகிறது. இது வறட்டுத்தனமான, அல்லது குருட்டுத்தனமான பேச்சு என்றே நான் சொல்லுவேன். கல்கி அவர்கள் இன்று உயிரோடு இருந்தால் இந்த என் கூற்றை முழுதும் ஒப்புக் கொள்ளவே செய்வார்.

இதைத் தழுவியும் விளக்கியும் இப்படிச் சொல்லலாம் : பழந் தமிழ் நாட்டு வரலாற்றுச் செய்திகள், செப்பேடுகள் கல்வெட்டுக்கள் செய்யுட்கள் ஆகியவற்றிலிருந்து, ஆராய்ச்சியாளர்களின் உழைப்பின் மூலம் சரித்திர நூல்களில் வகையாக இடம் பெறப் பல நூற்றுண்டுகள் ஆயின; தமிழ் வசன நடை செய்யுள் நடையிலிருந்து கிளைத்துத் தழைப்பதற்கும் நெடுங்காலம் ஆயிற்று. இவ்விரண்டும் நிகழ்ந்த பிறகே, சரித்திர நாவல்களுக்கான சாத்தியக் கூறுகள் உண்டாயின. அப்படி உண்டானவுடனேயே அவற்றைக் கல்கி தக்கபடி பயன்படுத்திக் கொண்டு, சீரான சரித்திர நாவல்களின் முன்னோடிகளாய் மும்மணிகளைப் படைத்தளித்தார் — அவர் வெளியிட்ட வரிசைப்படி அல்லாமல் அவற்றின் கால வரிசைப்படி: சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு, பொன்னியின் செல்வன்.

முன்னோடிகளாய் மட்டும் அல்லாமல் முன் மாதிரிகளாயும், முதல் முயற்சிகளாய் அல்லாமல் முதிர்ந்த சாதனைகளாயும் இவை மூன்றும் அமைந்தன. இவற்றின் கட்டுக்கோப்பும், உத்தியும், நடையும், இவற்றின் மூலம் கல்கி அடைந்த வெற்றியும், புகழும், அவருடைய உடன்கால இளைய எழுத்தாளர்கள் சிலரை, பழைமையைப் புதினத்தில் பொதிந்து அளிக்கும் முயற்சியில் ஈடுபடச் செய்தன. அத்தகையவர்களில் சிலர் — அகர வரிசைப்படி : அகிலன், அரு. இராமநாதன், சாண்டில்யன், மீ. ப. சோமு, நா. பார்த்தசாரதி, கோவி. மணிசேகரன், விக்கிரமன், ஹஸன், ஜெகசிற்பியன்.

இவர்களுடைய சரித்திர நாவல்களின் தராதரங்களை ஆராய்வதற்கோ, அவற்றைக் கல்கியின் நாவல்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கோ இது இடம் அல்ல. அப்படிச் செய்யாமலே, பொதுவாக இவர்களுக்கு உள்ள தகுதிகளைப் பார்க்கலாம். சரித்திர நாவல்கள் சம்பந்தப்பட்ட வரை, இவர்கள் எல்லாரும் சமூக நாவலாசிரியர்களிலிருந்து வேறுபட்டவர்கள்; அந்தந்தச் சரித்திர நாவல்களுக்கு வேண்டிய வரலாற்றுச் செய்திகளைக் கற்றறிந்தவர்கள்; அந்தந்தக் காலத்துச் சூழலுக்கு ஏற்றவாறு தமது தமிழ் நடையைப் பக்குவப்செய்து கொண்டவர்கள்.

இவர்களில் சாண்டில்யன், சரித்திர நாவல்கள் எழுதுவதையே தமது தனிப் பணியாகக் கொண்டவர். விக்கிரமனும் ஓரளவு அப்படியே. ''நந்திபுரத்துநாயகி'' என்ற தமது நாவலைக் கல்கிக்குக் காணிக்கை ஆக்கி இருக்கிறார் விக்கிரமன்; இந்த நாவலே ஒருவிதத்தில் கல்கியின் ''பொன்னியின் செல்வன்'' வரலாற்றுக் கதையின் தொடர்ச்சியாய்க் கற்பனை செய்யப்பட்டதாகும். அதன் முன்னுரையில், கல்கியின் சரித்திர நாவல்கள் எப்படித் தம் மனத்தில் அவற்றைப் போல் தாமும் எழுத வேண்டும் என்ற ஆசையையும் ஆர்வத்தையும் வளர்த்தன என்பதை விக்கிரமன் விரிவாகச் சொல்லி, ''பேராசிரியர் கல்கியின் ஆசியை முன்னரே மானசிகமாக வைத்து வணங்கி 'வருபவன் நான்'' என்கிறார்.

விக்கிரமன் போன்றோருக்கு இவ்வாறு ஆர்வம் ஊட்டியுள்ள கல்கியின் சரித்திர நாவல்கள், தனிப் பாணியும் மூலத் தன்மையும் கொண்டவை. ஆனாலும் அவற்றில் அங்கங்கே, ஆங்கிலத்தில் சரித்திர நாவல்கள் எழுதி உலகுக்கு வழிகாட்டிய வால்ட்டர் ஸ்காட்டின் அளாவலைக் காணலாம். அத்துடன், ஸ்காட்டை வழி காட்டியாய்க் கொண்ட ஃபிரான்ஸ் தேசத்து விக்டர் ஹ்யூகோவின் அளாவலையும் காணலாம். அவ்விருவரையும் தவிர, இன்னும் எத்தனையோ சரித்திர நாவல் ஆசிரியர்களின் படைப்புக்களை எல்லாம், பிள்ளைப் பருவம் முதலே படித்து வந்தவர் கல்கி. தத்தம் நாட்டின் சரித்

---



நோயாளி: எனக்கு ஒரே கவலையாக இருக்கு டாக்டர். நேற்று இரவு ஏதோ ஒரு பெரிய பொருளைத் தின்பதுபோல் கனவு கண்டேன்.

டாக்டர்: வெறும் கனவுதானே கண்மா. அதற்குப் போய் இப்படிப் பயப்பட்டால் எப்படி?

நோயாளி: நான் கவலைப்படுவது கனவு கண்டதற்காக அல்ல டாக்டர். இன்று காலையில் எழுந்து பார்த்தால் என் படுக்கையில் இருந்த தலையணையைக் காணவில்லை!

காரவான் - சரஸ்வதி பஞ்சு

அதிகாலையில்
ஸ்டேன்ஸ் காபி!
நாள் முழுவதும்
புத்துணர்ச்சி!!

ஒவ்வொரு கோப்பையிலும்
அதிக புத்துணர்ச்சி!




தி யுனைடெட் காபி சப்ளை கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

MAC(B) 1/75



சிறை அதிகாரி (கைதியிடம்): வெளியே நீங்கள் என்ன தொழில் பார்த்தீர்களோ அதையேதான் இங்கேயும் உங்களைச் செய்யச் சொல்லப் போகிறேன். நீங்கள் என்ன தொழில் செய்தீர்கள்? செருப்புத் தைப்பவரா? அல்லது தச்சு வேலை செய்பவரா?

கைதி: இரண்டும் இல்லை. டிராவலிங் சேல்ஸ்மேனாக இருந்தேன். காரவான் - சரஸ்வதி பஞ்சு

---

திர நிகழ்ச்சிகளை அவர்கள் இலக்கிய மாய்ப் புனைந்து அளித்தது போலவே, தாமும் தமிழ் நாட்டின் தொன்மை விந்தைகளையும் சிறப்புக்களையும் அளிக்க வேண்டும் என்பதாக, அவர் கொண்ட ஆசையின் பலனே அவருடைய வர லாற்று நாவல்கள். அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்கு வாய்ப் பாகவும், உதவியாகவும், அவருடைய காலத்திலே, ஆதாரபூர்வமான தென் னிந்திய வரலாற்று நூல்கள் சில வெளி யாகிப் படிக்கக் கிடைத்தன.

கல்கியின் சரித்திர நாவல்களுக்குப் பெரிதும் பயன்பட்டவை என்பதாக, கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியின் ''சோழர்கள்'' என்ற ஆங்கில நூலை யும், டி. வி. சதாசிவ பண்டாரத்தார் எழுதிய ''பிற்காலச் சோழர் சரித் திரம்'' என்ற புத்தகத்தையும் குறிப் பிடலாம். இவற்றில் 1935லும் 37லும் இரண்டு பாகங்களாய் வெளியான முதல் புத்தகம், கல்கியின் சரித்திர நாவல்கள் எல்லாவற்றுக்கும் பொது வாகப் பயன்பட்டது; 1949ல் வெளி யான இரண்டாவது புத்தகம் ''பொன்னியின் செல்வன்'' நாவலுக் குக் குறிப்பாக உபயோகமாயிற்று. இவற்றைத் தவிர கல்கி பயன்படுத் தியவை என நிச்சயமாய்ச் சொல்லக் கூடிய சில நூல்களும் உண்டு. (இவற் றின் விவரங்களை இந்த அத்தியாயத்தின் இறுதியில் உள்ள பட்டியலில் காண லாம்.)

சரித்திரச் சான்றுகளும் இலக்கிய ஆதாரங்களும் கொண்ட முக்கியமான புத்தகங்கள் சிலவற்றை, தனியாக ஒரு பழைய டிரங்குப் பெட்டியில் கல்கி வைத்திருந்தார் என்று அவருடைய குமாரர் தெரிவிக்கிறார். ''பொன்னி யின் செல்வன்'' நெடுந்தொடரை எழுது கையில், அந்தப் பெட்டியைத் தமது பள பளப்பான பெரிய மேஜைக்கு அருகே கைக்கு எட்டும்படியாய் அவர் வைத்துக் கொண்டிருந்தாராம். எழுதுகையில் சந் தேகம் தோன்றும் போதும், புதிய அல் லது துல்லியமான தகவல் வேண்டும் போதும், அதைத் திறந்து தேவையான புத்தகங்களை எடுத்துப் புரட்டிப் பார்ப்பாராம்.

(''பொன்னியின் செல்வன்'' நாவ லில், குடந்தை ஜோதிடர் வைத்திருந்த பழைய பெட்டி ஒன்றில், அரச குலத் தோர் பலருடைய ஜாதகங்கள் இருந் தன அல்லவா? அந்த ஜாதகங்களுக்கு உரியவர்களின் வரலாற்றுக் குறிப்புக் களும், அவர்களுடன் சம்பந்தப்பட்ட இன்னும் எத்தனையோ பேர்களின் குறிப் புக்களும், கல்கியின் பழைய பெட்டியில் இருந்தன!).

அந்தப் பெட்டியில் இருந்தவற்றில் சில புத்தகங்களே இப்போது எஞ்சியுள் ளன். அவற்றில் ஒன்று ஏற்கனவே குறிப்பிட்ட சதாசிவ பண்டாரத்தாரின் புத்தகம்.

எவ்வளவு கருத்தூன்றியும் உப யோக நோக்குடனும் அதைக் கல்கி படித்திருக்கிறார் என்பதற்கு அடை யாளமாக, பல பக்கங்களில், அடிக் கோடுகள், வரம்புக் கோடுகள், கேள் விக் குறிகள், ஆச்சரியக் குறிகள் முதலி யன நிறைந்துள்ளன. காலி வரம்புகளி லும் காலித் தாள்களிலும், ஆங்கிலத்தி லும் தமிழிலுமாகச் சிறு சிறு குறிப் புக்கள்: ''நல்ல தகவல்'', ''நாவ லுக்கு ஏற்ற விஷயம்'' என்று சில; ''வெறும் ஊகமே'', ''என்னுடைய அனுமானம் இதுதான்'' என்பவை போல் வேறு சில.

அந்தப் புத்தகத்தின் 75ம் பக்கத்தில், பண்டாரத்தாரின் இந்த இரண்டு வாக்கியங்கள் உள்ளன: ''குந்தவைப் பிராட்டி வல்லவரையன் வந்தியத் தேவனுக்கு மணம் செய்து கொடுக்கப் பெற்றனள். அவ்வரச குமாரன் வேங்கி நாட்டில் வாழ்ந்த கீழைச் சளுக்கியர் மரபினனாதல் வேண்டும்.''

இவற்றின் இரண்டாவது வாக்கியத் தின் கருத்தைக் கல்கி ஒப்புக் கொள் ளாமல், ''வல்லவரையன் வல்லத்து வாணர் குல இளவரசனாய் இருக்கலாம்'' என்று குறிப்பு எழுதி யிருக்கிறார். பின்னர் இதையே உறுதிபடக்கொண்டு— வேறு எங்கிருந்து கிடைத்த சான்றுடன் என்று தெரியவில்லை — வந்தியத்தேவனை ''பொன்னியின் செல்வன்'' நாவலின் கதாநாயகனாக ஆக்கி, முதல் அத்தி யாயத்திலிருந்து கடைசி அத்தியாயம் வரை, வீரனாகவும், தோழனாகவும், காதலனாகவும் அவனை உலாவ விட் டிருக்கிறார்; மகுட நாயகன் அருள் மொழிவர்மனுக்கு ஒப்பாக அவனுக்கு இடமும் ஏற்றமும் கொடுத்திருக் கிறார்; தமது இலக்கிய ஆற்றலை எல் லாம் கொண்டு ஆசையுடன் படைத்த அந்த வீரத் தமிழனை, ''உன் திருநாமம் என்றும் நிலைத்து விளங்குவதாக!''

எனத் தமது நாவலின் இறுதியில் வாழ்த்தி, அந்த நாவலின் மூலமே அவ்வாறு வாழ வைத்திருக்கிறார்.

அந்த வீரனை வாணர் குலத்தோன் எனத் தீர்மானித்து அதன்படியே எழுதிவிடுவது என்று கல்கி திட்டமிட்ட போது, அக்குலத்தைத் தோற்றுவித்த மாவேந்தனின் மகிமை பற்றி, முன்பு எப்போதோ குற்றாலத்தில் சில பழைய வெண்பாக்களை ரசிகமணி பாடிக் காட்டியது நினைவுக்கு வந்தது. உடனே அவர் அந்த வெண்பாக்களையும் அவை போன்ற எல்லாவற்றையும் எழுதி அனுப்பும்படி டி.கே.சி.க்குக் கடிதம் போட்டார். மறு தபாலில் வந்த பாடல்களை, ''பலே! பலே!'' என்று சொல்லிக் கொண்டே கல்கி படித்துவிட்டு, தமது துணை நூற்களஞ்சியத்துடன் அவற்றைப் பத்திரமாய் வைத்துக் கொண்டார். பின்னர் நாவலைத் தொடராய் எழுதிக் கொண்டு போகையில், அவைகளில் சிலவற்றை உரிய கட்டங்களில் உபயோகித்தார்; அல்லது அவைகளை உபயோகிப்பதற்கென்றே உரிய கட்டங்களை உண்டாக்கினார்! அத்தகைய கட்டங்களில் ஒன்றே ஒன்றை மட்டும் இங்கே பார்ப்போம்:

சோழ நாட்டுக்கு வந்தவுடனேயே அரசியல் மர்மங்களிலும் சூழ்ச்சிகளிலும் சிக்கிக் கொள்கிறான் வந்தியத்தேவன்; அத்துடன் வீரத்தைக் காட்டுவதற்கும் காதல் புரிவதற்கும் நல்ல வாய்ப்புக்களையும் காண்கிறான். ஆழ்வார்க்கடியான் நம்பி சொல்லும் யோசனையின் பேரில், குடந்தை சோதிடரைக் காணக் குதிரை மேல் ஏறி விரைகிறான். தனக்கு முன்னால் சோதிடம் கேட்டுவிட்டுச் செல்லும் இரண்டு பெண்களில் குந்தவையின் அழகில் அவன் சொக்கித் திணறிய பிறகு, வாசாலகரான அந்தச் சோதிடருடன் கொஞ்சம் சொற்சிலம்பம் ஆடிவிட்டு, தனது வருங்காலக் கூறுகளைச் சொல்லும்படி வேண்டுகிறான். ''நேரமாகிவிட்டது, போக வேண்டும் ஐயா!'' என்று அவசரப்படுத்துகிறான்.

''அப்படி அவசரமாக எங்கே போக வேண்டும் அப்பனே?''

''அதையும் தாங்கள் சோதிடத்தில் பார்த்துச் சொல்லக் கூடாதா? எங்கே போக வேண்டும், எங்கே போகக் கூடாது, போனால் காரியம் சித்தியாகுமா என்பதைப் பற்றியெல்லாந்தான் தங்களைக் கேட்க வந்தேன்.''

''ஆருடம் சொல்வதற்கும் ஏதாவது ஆதாரம் வேண்டும், அப்பனே! ஜாதகம் வேண்டும், ஜாதகம் இல்லாவிடில், பிறந்த நாள் நட்சத்திரமாவது தெரிய வேண்டும்; அதுவும் தெரியாவிடில், ஊரும் பேருமாவது சொல்ல வேண்டும்.''

''என் பெயர் வந்தியத்தேவன்!''

''ஆகா! வாணர் குலத்தவனா?''

''ஆமாம்.''

''வல்லவரையன் வந்தியத்தேவனா?''

''அவனேதான்.''

''அப்படிச் சொல்லு, தம்பி! முன்னமே சொல்லி இருக்கக் கூடாதா? உன் ஜாதகம் கூட என்னிடம் இருந்ததே! தேடிப் பார்த்தால் கிடைக்கும்.''

''ஓஹோ! அது எப்படி?''

''என்னைப் போன்ற சோதிடர்களுக்கு வேறு என்ன வேலை? பெரிய வம்சத்தில் பிறந்த பிள்ளைகள் — பெண்கள், இவர்களுடைய ஜாதகங்களையெல்லாம் சேர்த்து வைத்துக் கொள்வோம்.''

''நான் அப்படியொன்றும் பெரிய வம்சத்தில் பிறந்தவன் அல்லவே.....''

''நன்றாகச் சொன்னாய்! உன்னுடைய குலம் எப்பேர்ப்பட்ட குலம்? வாணர் குலத்தைப் பற்றிக் கவிவாணர்கள் எவ்வளவு கவிகளையெல்லாம் பாடியிருக்கிறார்கள்! ஒரு வேளை நீ கேட்டிருக்கமாட்டாய்!''

''ஒரு கவிதையைத்தான் சொல்லுங்களேன், கேட்கலாம்.''

சோதிடர் பின்வரும் பாடலைச் சொன்னார்:

வாணன் புகழுரையா வாயுண்டோ, மாகதர் கோன்
வாணன் பெயரெழுதா மார்புண்டோ— வாணன்
கொடி தாங்கி நில்லாத கொம்புண்டோ, உண்டோ
அடிதாங்கி நில்லா அரசு!

(இதுவும், வாணன் பற்றிய வேறு சில வெண்பாக்களும், கம்பன் பாடியவைகளாகத் ''தனிப்பாடற்றிரட்டு'' என்ற நூலில் உள்ளன.)

வந்தியத்தேவன் பற்றிய வரலாற்றுச் செய்திகள், பண்டாரத்தாரின் புத்தகத்திலும் வேறு புத்தகங்களிலும், மொத்தம் பத்துப் பதினைந்து வரிகளுக்குள் அடங்கிவிடும். இவைகளே, ''பொன்னியின் செல்வன்'' நாவலில் பல்லாயிரம் வரிகளாய் விரிந்துள்ளன. இவ்வாறே, கல்கியின் ஒவ்வொரு சரித்திர நாவலிலும், சிறு சிறு விதைகளான வரலாற்

---



வகுப்பில் ஆசிரியர் நீளமான கணக்கு ஒன்றைப் போட்டார். முடிவில் சொன்னார்: ''இதன் விடை — சைபர். ஒன்றுமில்லை.''

''ஒன்றுமில்லாததற்கெல்லாம் ஏன் எங்கள் பிராணனை வாங்குகிறீர்கள்?'' தூக்கக்கலக்கமான குரல் ஒன்று கேட்டது!'' — எம். எஸ்.

காட்டுமிராண்டி அம்மாவும், பிள்ளையும் காட்டு வழியே போய்க் கொண்டிருந்தார்கள். அப்போது மேலே ஒரு விமானம் பறந்து சென்றது. ''அது என்ன அம்மா?'' என்று பையன் கேட்டான்.

அம்மா விளக்கினுள்: ''அது பாதாம்கொட்டை மாதிரி. அதன் உள்ளே இருப்பவர்களைத்தான் நாம் சாப்பிட வேண்டும்!'' — எம். எஸ்.



---

று செய்திகள் மாபெரும் கற்பனைத் தருக்களாய் ஓங்கி வளர்ந்துள்ளன.

இன்னும் ஓர் உதாரணம்: அஜந்தா குகைகளில் உள்ள ஓவியங்களில் பயன்பட்டவை கனிஜ வர்ணங்கள் (Mineral Colours) என்பது, நீலகண்ட சாஸ்திரியாரின் நூலிலிருந்து ஒரே ஒரு வாக்கியத்தின் மூலம் கல்கிக்குத் தெரிந்த உண்மை. இந்த உண்மையைத் தான் அவர், ஆயனச் சிற்பிக்குத் தெரியாத இரகசியமாக வைத்துக் கொண்டு, ''சிவகாமியின் சபதம்'' நாவல் நெடுகிலும் அதைக் கற்பனை வர்ணச் சரடாக ஓடவிட்டு, அதிலேயும் அதன் மூலமும், சித்திர விசித்திரப் பின்னல் வேலைப்பாடுகள் செய்திருக்கிறார் ; மர்ம முடிச்சுக்களைப் போட்டு அவிழ்த்திருக்கிறார்; குழப்பச் சிக்கல்களை உண்டாக்கிப் பிரித்திருக்கிறார்.

கல்கியின் கற்பனை ஆற்றல், அவருடைய ''சோலைமலை இளவரசி'' கதையில் குமாரலிங்கம் காணும் பகற் கனவுகளுக்கு ஒப்பானது என்று இங்கே சுருக்கமாய்ச் சொன்னால் போதுமானது. பழந்தமிழ் நூல்களில் அவர் கொண்டிருந்த அறிவுக்கோ, அவருடைய நாவல்களிலேயே போதிய சான்றுகள் காணலாம். அவர் கருத்தூன்றிப் படித்ததாய் உள்ள புத்தகங்களும் சான்றுகளாய் உள்ளன. அவருடைய சரித்திர நாவல்களுக்குப் பயன்பட்டதாய், முழுதுமாகவோ பகுதிகளாகவோ அவர் படித்திருந்த இலக்கிய நூல்கள் என்பதாக நிச்சயமாய்ச் சிலவற்றைச் சொல்லலாம் : புறநானூறு, சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி, நந்திக் கலம்பகம், பெரிய புராணம், சைவ — வைணவப் பெருங் கவிகளின் நூல்கள்.

இந்த நூல்களையெல்லாம் கல்கி நன்கு கற்றிருந்ததால்தான், தமது வரலாற்று நாவல்களில், அதனதன் காலத்துக்கு உரிய பழக்க வழக்கங்களையும் சூழலையும் சிராகப் பொதிந்து அளிக்க முடிந்தது. (அந்தந்தக் காலத்துக்குப் பொருந்தும் சொற்களுடன், பொருந்தாதவை சில கலந்திருப்பதை மட்டும் அவரால் தவிர்க்க முடியவில்லை போலும்.)

நூலறிவுடன், நேர்முகக் காட்சி அறிவும், கல்கியின் வரலாற்று நாவல்களுக்குச் சிருட்டின. ''சிவகாமியின் சபதம்'' நாவலை இறுதி வடிவில் தொடராய் வெளியிடுகையில், அவர் நெடும் பயணம் செய்து, அஜந்தாவையும் எல்லோராவையும் பார்த்தார். பின்னர் ''பொன்னியின் செல்வன்'' நாவலுக்காக, அதைவிட விரிவாகச் சோழ நாட்டிலும் ஈழ நாட்டிலும் பயணம் செய்து, தாம் கண்டவற்றைத் தொன்மைக் காலத் தோற்றங்களாய்க் கற்பனை செய்து கொண்டார். இந்தக் காட்சிப் பயணங்கள் பற்றி உடனுக்குடன் அவர் எழுதிப் பிரசுரித்த கட்டுரைகள், ''நம் தந்தையர் செய்த விந்தைகள்'' என்ற நூலில் பின்னர் ஒரு தொகுப்பாய் வெளியாயின.

இரண்டு பயணங்களிலும் ஓவியர் மணியம் கல்கியுடன் சென்றார். அவருடைய கைவண்ணம் கல்கியின் சொல் வண்ணத்துக்குத் துணையாகி, இலக்கிய இன்பத்துடன் காட்சி இன்பத்தையும் சேர்த்து வாசகர்கள் அனுபவிக்கும்படி செய்தது.

நெடும் பயணங்கள் மூலமும் நெடுங் காலப் படிப்பின் மூலமும் அறிந்து கொண்ட செய்திகளை, தமது நாவல்களில் எங்கெங்கே எப்படி எப்படியெல்லாம் கல்கி பயன்படுத்திக் கொண்டார் என்பது விரிவான ஆராய்ச்சிக்கு உரியது. அவ்வித ஆராய்ச்சிக்கு இந்த வரலாற்றில் இடம் இல்லை என்பதுடன், அதற்கு வேண்டிய தகுதியும் இதன் ஆசிரியனுக்கு இல்லை. சரித்திர அறிவும் இலக்கிய அறிவும் வெகுவாகக் கொண்டோர் செய்ய வேண்டிய ஆராய்ச்சி அது.

இவர்களுக்கும், புதிதாகச் சரித்திர நாவல்கள் எழுத விரும்புவோருக்கும், ஓரளவுக்கு உதவியாய் இருக்கக் கூடியவை, முன்பு குறிப்பிட்ட இந்தப் புத்தகங்கள்:

*பிற்காலச் சோழர் சரித்திரம் — சதாசிவ பண்டாரத்தார்; சோழன் இராஜ ராஜன்— ஏ. பாலசுந்தரம்; பல்லவர் வரலாறு — மா. ராசமாணிக்கம் பிள்ளை.* **Cholas - Sri A. Nilakanta Sastri ; Pallavas of Kanchi - R. Gopalan, The Pallavas -Prof. Dubreril. Pallava Architecture - A. H. Longhurst. Administration and Social Life under Pallavas - Dr C.Meenakshi. The Sangam Age - T. G. Aravamuthan. Ancient India - Dr S. Krishnaswami Iyengar.** *(தொடரும்)*

# ஒரு கல் வீச்சு, ஆயிரம் திவலைகள்!

ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்

## போட்டிக் கதை-II

**ச**க்கர நாற்காலியில் வீற்றிருந்தபடியே ஜன்னல் கதவுகளை எம்பித் திறந்தாள் ஆண்டாள். சாதாரணமாக அவள் திறப்பதற்கும், பூ விற்றுக் கொண்டு செல்லும் பையன் கனகுஷியாகச் சைக்கிளில் பறப்பதற்கும் சரியாயிருக்கும். ஒரொரு சமயம் மாடியிலிருந்து கூடையைக் கீழே இறக்கிப் பூ வாங்குவாள். மனம் அலை பாயும் நாட்களில் சும்மா இருந்து விடுவாள். அதோ ஊதல் வியாபாரி! வருஷம் முழுதும் ஊதிக் கொண்டே தெரு வழியாகச் செல்கிறான். அவன் தாடிக்கு மத்தியில் அவ்வப்போது தோன்றி மறையும் பொக்கை வாய்ச் சிரிப்புக்கு ஒரு தனிக் கவர்ச்சி உண்டு. அவன் ஒருநாளும் மனம் சோர்ந்து அவள் கண்டதில்லை. இவர்களுக்கெல்லாம் வாழ்க்கையின் மீது ஒரு தனிப் பிடிப்பு இருக்கத்தான் செய்கிறது. எதைப் பற்றியும் ஆழமாகச் சிந்திக்காமல், வாழ்க்கை தரும் அனுபவங்களை யெல்லாம் அப்படியே ஏற்றுக் கொண்டு வாழப் போய் இப்படியாகி விட்டார்களா? தனக்கு மட்டும் ஏன் அவ்வப்போது மனத்தில் சஞ்சலம் பிறக்க வேண்டும்? வாழ்க்கைக்கு ஏதாவது அர்த்தம் உண்டா என்று துருவி ஆராயச் சொல்வது எது? தன் துர்ப்பாக்கிய நிலையா? இல்லை, எழுத்துத் துறையில் இறங்கியதன் சாபக்கேடா?

இன்றுகூட மனம் ஒரு நிலையில் இல்லை தான். நேற்று காலைப் பேப்பரில் சத்திய பாமாவின் படம் வெளிவந்திருந்தது. ஆண்டாளின் நெருங்கிய தோழி. 'பாரசூட்'டில் அவள் இறங்கினதைப் பற்றிப் பத்திப் பத்தியாக எழுதியிருந்தார் ஒரு நிருபர். அதைப் படித்த பிறகு மனம் ஒரு நிலையில் இல்லை. மத்தியானம் தூங்கி விழித்ததும் அலை பாயும் மனம் கொஞ்சம் ஓய்ந்திருந்தது. சமையற்கார அம்மாள் தந்த 'ஸ்டிராங்' காப்பி மீண்டும் அவளைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்தது. கதை எழுதலாம் என்று சக்கர நாற்காலியை மேஜையருகில் ஓட்டிச் சென்றாள். நாலைந்து பக்கங்கள் எழுதுவதற்குள் நாதஸ்வர இசை காற்றில் மிதந்து வந்தது. போகப் போக அது கிட்டத்தில் ஒலித்தது. மீண்டும் ஜன்னல் பக்கம் சக்கர நாற்காலியை ஓட்டினாள். நரிக் குறவர்கள் 'பெட்ரோமாக்ஸ்'டன் முன்னே செல்ல, 'மாப்பிள்ளை அழைப்பு' ஊர்வலம் அவள் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. அவள் கதைகளில் இது போன்ற எத்தனையோ ஊர்வலங்களை வர்ணித்திருக்கிறாள். சமீபத்தில் பரிசு பெற்ற 'ஊஞ்சல்', என்ற அவள் கதை முழுவதையுமே ஓர் ஊர்வலம் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது... மாப்பிள்ளையின் முகம் சரிவரத் தெரியவில்லை. மாலைகள் மறைத்திருந்தன. ஆனால் 'அழகன்' என்று ஒரே பார்வையில் தெரிந்துவிட்டது. இந்த மன்மதனுக்கு மாலையிடப் போகும் மாதரசி யாரோ?

சட்டென்று அப்பா சொன்னது நினைவுக்கு வந்தது. கோடி வீட்டு வைதேகிக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. வரனுக்கு ஸி. எஸ். ஐ. ஆரில் பெரிய வேலை. கை நிறையச் சம்பளம். அநேகமாக இந்த 'மன்மதனு'கத்தான் இருக்கும்! ஏனோ அவள் மனம் கலங்கியது. வைதேகியும் அவளும் சிறு வயதில் நெருங்கிய தோழிகள். பிறகு வைதேகி விலகிக் கொண்டுவிட்டாள். எப்பொழுதாவது கண்ணில் தென்பட்டால் சிரிப்பாள். அத்துடன் நிறுத்திக் கொண்டுவிடுவாள். கல்யாணத்துக்குக்கூடத் தன்னை வந்து அழைக்கவில்லையே! ஏனோ தன் தோழிகள் வயது வந்ததும் தூரே தூரே செல்வது போல் தோன்றியது ஆண்டாளுக்கு. கல்யாணமாகி விட்டாலோ மறந்தே விடுகிறார்கள்!

நேற்று மனத்தில் பிறந்த சஞ்சலம் இன்னும் மறைந்தபாடில்லை. சாதாரணமாகத் தன் எண்ணங்களைத் தறிகெட்ட முறையில் ஓட அனுமதிக்கமாட்டாள் ஆண்டாள். அப்பாவின் அபரிமிதமான அன்பை நினைத்தாலே அவளுக்கு மனத்தில் புதுத் தெம்பு பிறந்துவிடும். புத்தகங்களின் தோழமை — அப்பாதான் முன் யோசனையுடன் எவ்வளவு பெரிய நூலகத்தை அமைத்துத் தந்திருக்கிறார் — அவளுடைய மனத்தில் கப்பும் மேகங்கள் அனைத்தையும் ஒரே நொடியில் ஓடஓட விரட்டிவிடும். இன்னும் மனம் சங்கடப்பட்டதென்றால் இருக்கவே இருக்கிறது. இலக்கிய சிருஷ்டி! கதை, நாவல் என்று எழுதத் தொடங்கினால் ஒரு வெறி அவளை ஆட்கொண்டுவிடும். வெற்றிகரமாக ஒரு கதையை எழுதி முடித்தவுடன் அவளுக்கு ஏற்படும் மன நிறைவு, சஞ்சலங்களையெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓட்டிவிடும்!

போன வருஷம் ஆண்டாளுக்கு 'நிமோனியா' ஜுரம் வந்தது. படுத்த படுக்கையாகிவிட்டாள். அப்பா கட்டிலை விட்டு நகரவில்லை. அம்மாவைக் கொண்டு போனது இந்தப் பிணிதானும்! ஆண்டாள்

வியாதியுடன் மனம் தளராமல் போரிட்டாள். அவள் தந்த ஒத்துழைப்பு டாக்டரையே வியப்பில் ஆழ்த்தியது. ஆனால் ஓர் ஞாயிற்றுக் கிழமை அர்த்தமற்ற சூன்யம் அவள் மனத்தை வருத்தியது. அப்பாவைப் பக்கத்தில் அழைத்தாள்.

''நான் பிழைத்து என்ன ஆகவேண்டியிருக்கிறது அப்பா? சக்கர நாற்காலியிலேயே விழுந்து கிடக்கும் நான் வாழ்க்கையில் என்னத்தைச் சாதிக்கப் போகிறேன்? யாருக்கும் பயனில்லாமல் வாழ்க்கையை ஓட்டுவதில் என்ன அர்த்தம்? என்னைச் சாக விடுங்கள், அப்பா!''

அப்பா தம் கலக்கத்தை வெளிக் காட்டவில்லை. தத்துவரீதியாகப் பதில் சொன்னார்.

''அம்மா குழந்தை! உன் வாழ்க்கை பயனுள்ளதா இல்லையா என்று தீர்மானிக்க நீ யார்? அப்படிப் பார்க்கப் போனால் யார்தான் என்ன சாதித்துவிட்டார்கள்? நீ பெரிய இலக்கியகர்த்தா. சிறந்த கதைகளையும், நாவல்களையும் எழுதுவதே பெரிய சாதனை இல்லையா? சின்னக் குழந்தைகளுக்காக நீ வரைந்த புத்தகம் எத்தனை பிஞ்சு உள்ளங்களை நாள்தோறும் மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது? உன் நாவல்கள் எத்தனை பேருக்குத் தங்கள் மனக் கவலைகளை மறக்க மருந்தாகின்றன?... வாழ்க்கைக்கு என்ன அர்த்தம் என்று கேட்டால் பொதுப்படையாகப் பதில் அளிப்பது பிரயாசை. ஆனால் அவரவர் வாழ்க்கைக்கு அவரவர் ஓர் அர்த்தம் கற்பிக்க முடியும். பற்றற்ற முறையில் பார்த்தால் உன் வாழ்க்கை பயனுள்ளதாகவே படுகிறது எனக்கு. பிள்ளை பெற்றால்தானா வாழ்க்கை?''

அதற்குப்பின் ஆண்டாள் அவ்வளவாக மனத்தைத் தளரவிட்டது கிடையாது. அநேகம் நாவல் போட்டிகளிலும், சிறுகதைப் போட்டிகளிலும் பரிசுகள் கிடைக்கப் போய் அவள் மிகப் பிரபலமடைந்து விட்டாள். தினமும் 'எங்கள் பத்திரிகைக்குக் கதை', 'எங்கள் விசேஷ மலருக்கு விஷயதானம்' என்று பத்திரிகை ஆசிரியர்கள் அவளை நச்சரித்தார்கள். பேட்டி காண வந்தவர்களின் எண்ணிக்கை அனந்தம். சினிமா நடிகைகளாட்டம் அவளுக்கும் விசிறிகள் தோன்றியிருந்தார்கள். காலையில் எழுந்தால் தூங்கப் போவது வரையில் ஏதாவது வேலை இருந்து கொண்டே இருந்தது.

ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் பின்வரும் தோரணையில் ஓடும் அவள் சிந்தனை: 'சக்கர நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு கற்பனையை ஓட விடுகிறேன் நான். எதையும் அனுபவிக்காமலே, அனுபவித்த தோரணையில் எழுதுகிறேன். வாசகர்கள் அதை மெச்சுகிறார்கள். என் 'இன்ஸைட்' பிரமாதம்






## கார்த்திகை தீபம்

அணங்கின் கரத்தை அலங்கரிக்கும்
அகல் தீபம் ஒளிரட்டும்
சுணங்கும் மனிதர் இதயஇருள்
அகன்று அருள் பரவட்டும்.

மேலட்டை வண்ணப்படம்: திலிப் பானர்ஜி

என்று குறிப்பிடுகிறார்கள். நான் மட்டும் மற்றவர்களைப் போல் எல்லாவற்றையும் நுகர்ந்து எழுதியிருந்தால் என் எழுத்து இன்னும் சோபித்திருக்குமோ? யார் கண்டார்கள்? வாழ்க்கையில் இந்தக் குறை இல்லையென்றால் ஒருவேளை நான் எழுத்துத் தொழிலையே மேற்கொண்டிருக்கமாட்டேன். விமானம் ஓட்டக் கற்றுக் கொண்டிருப்பேன்.'

மனத்தில் திடீரென்று இருள் கப்பியது. கதை எழுதுவது கசந்தது. ஏன், எல்லாமே கசந்தது! சூன்யம் அவளைச் சூழ்ந்துகொண்டு பயமுறுத்தியது.

'காலிங்பெல்'லை யாரோ ஒலித்தார்கள். சக்கர நாற்காலியை வேகமாக ஓட்டிக் கொண்டு கதவை நெருங்கினாள்.

வந்தவன் இளைஞன். முப்பது வயது இருக்கும். எழுத்தாளர் ஆண்டாளைப் பார்க்க வேண்டுமாம்! புதுப் பத்திரிகையின் உதவி ஆசிரியரோ? சகோதர எழுத்தாளரோ?

"அவர்கள் வெளியே போயிருக்கிறார்கள். வரச் சற்று நேரமாகும்" என்றாள் ஆண்டாள். ஏன் அப்படிச் சொன்னோம் என்று அவளுக்கே புரியவில்லை.

"இருந்து பார்த்துவிட்டுப் போகிறேன். என் வாழ்க்கையை மேம்படச் செய்த தெய்வமாயிற்றே அவர்கள்!"

ஆண்டாளுக்கு ஒன்றும் புரியவில்லை. வந்தவனுக்கு மூளைக்கோளாறோ என்றுகூட எண்ணினாள். சமாளித்துக் கொண்டு, "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றாள்.

"அம்மா! எழுத்துக்கு இவ்வளவு சக்தி உண்டு என்று எனக்குத் தெரியாது. என் வாழ்வில் இருள் சூழ்ந்தபோதெல்லாம் ஒளி காட்டினது ஆண்டாள் அவர்களின் எழுத்துக்கள்தாம்."

"கொஞ்சம் விளக்கமாகத்தான் சொல்லுங்களேன். உங்கள் பேச்சு ஒரே புதிராக இருக்கிறது!"

"எழுத்தாளரின் ஒவ்வொரு சிருஷ்டியும் ஒரு கல் போல. கல்லைத் தண்ணீரில் விட்டெறிந்தால் திவலைகள் தோன்றுவது போல், எழுத்தாளரின் படைப்புகள் நம் அகத்தில் பல்வேறு விதமான உணர்ச்சிகளை எழுப்புகின்றன. எல்லோருடைய மனத்திலும் ஒரே விதமான உணர்ச்சிகள் தோன்றும் என்று சொல்வதற்கில்லை. குறிப்பிட்ட கதையைப் படித்தால் உங்களுக்கு ஏற்படும் அனுபவம் வேறு, எனக்கு ஏற்படும் அனுபவம் வேறு. அது அவரவர் மன நிலையைப் பொறுத்தது."

"சரியான இலக்கிய விமர்சகராக இருப்பீர்கள் போலிருக்கே!"

"அப்படியொன்றும் இல்லை. மனத்தில் பட்டதைச் சொன்னேன். ஒரு கல் வீச்சினால் ஓராயிரம் திவலைகளை எழுப்புவதுதான் எழுத்தாளரின் சாதனை!"

இளைஞனின் பேச்சு சுவாரசியமாக இருந்தது.

"காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்று அவனை உபசரித்தாள். "வேண்டாம். ஆண்டாள் அவர்கள் தரிசனம் கிடைத்தால் போதும். அதற்காகத்தானே நூறு மைல் அப்பாலிருந்து வந்திருக்கிறேன்?"

"ஆண்டாள் அவர்களைப் பற்றி வேறு ஏதாவது தெரியுமா?"

"இலக்கியப் போட்டிகளில் நிறையப் பரிசுகள் பெற்றவர் என்று தெரியும். வாழ்க்கை மீது நிறையப் பிடிப்புடையவராக இருப்பார் என்று அவர் கதைகளிலிருந்து அனுமானித்திருக்கிறேன். பிறர் மனத்தில் நம்பிக்கையை வளர்த்து வெளிச்சம் காட்டுகிறவர் வேறு எப்படி இருக்க முடியும்?"

"நீங்கள் அவர் எழுதுவதையெல்லாம் படிப்பதுண்டா?"

"படிப்பதுண்டாவா? அவர் புத்தகங்கள்தான் என் பைபிள், கீதை எல்லாம். வாழ்க்கையில் எவ்வளவோ சந்தர்ப்பங்களில் துணிவை இழந்து தற்கொலை செய்துகொள்ள முயன்ற எனக்குத் தெம்பூட்டினதெல்லாம் அவர்கள் கதைகள்தாம்."

"நிஜமாகவா?"

"இல்லாவிட்டால் மாதவியின் இழப்பை என்னால் தாங்கிக் கொண்டிருக்க முடியுமா? இலட்சிய தாம்பத்தியத்துக்கு இலக்கணமாக அல்லவோ நாங்கள் வாழ்ந்து வந்தோம்? என்னமா வீணை வாசிப்பாள்? சமூக சேவை என்று இறங்கிவிட்டால் சாப்பாடுகூட வேண்டாம். கடைசியில் திடீரென்று போய்விட்டாள். ஆண்டாள் மட்டும் 'தாஜ்மஹால்' என்ற கதையை எழுதியிருக்காவிட்டால் நான் உயிரையே மாய்த்துக் கொண்டிருப்பேன். எனக்காகவே அவர் அந்தக் கதையை எழுதினார் போலும்! இழந்த மனைவிக்காகப் புலம்பி ஒரு சலவைக் கல் சமாதி எழுப்புவதைவிட, அவள் அரைகுறையாக விட்டுச் சென்ற ஆக்கப் பணிகளைச் சரிவர முடிப்பதே சிறந்த நினைவுச் சின்னம் என்ற கருத்தை என் மனத்தில் வளர்த்ததே அந்தக் கதைதான். துணிந்து செயலில் இறங்கினேன். துக்கத்தை மறந்தேன்..... 'தாஜ்மஹாலை'ப் படித்த போது எனக்கு ஏற்பட்ட அனுபவம் தனி. இன்னும் யார் யார் மனத்தில் என்னென்ன திவலைகளைத் தோன்ற வைத்ததோ அது?"

# விலையை ஒப்பிடுக.
# தரத்தை சோதித்திடுக.

## பாய்ண்ட்

தரமான டிட்டர்ஜண்ட்
சலவைப் பவுடர்

Point
DETERGENT WASHING POWDER
for sparkling white and brilliant colour washes

Point
Net Weight 750 gms
for sparkling white and brilliant colour washes

MCA/PD/4

மைசூர்
சந்தன சோப்
தயாரிப்பாளர்
அளிப்பது



பெங்களூர் அரசினர் சோப்பு
தொழிற்சாலையின் ஒரு தரமான தயாரிப்பு





# மகளின் மகத்தான மங்கள மண நாளுக்கு

# முத்துக்குவியல்

உங்களது செல்வ மகளின் திருமணம் சிறப்பாக நடைபெறத் தேவையான பணம் சேமிக்கத் தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்கின் புதிய "முத்துக் குவியல் டெபாசிட் திட்டம்" உதவுகிறது.

ரூ. 1000/- மற்றும் ரூ. 1000/-த்தின் பெருக்குத் தொகைகளில் டிபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. 5 ஆண்டுகளுக்கு மேல் 21 ஆண்டுகள் வரை டிபாசிட் செய்து, இத் திட்டத்தில் பயனடையலாம்,

இன்றே இத் திட்டத்தில் ரூ. 1000/- முதலீடு செய்யுங்கள். வரும் ஆண்டுகளில் அத்தொகை எப்படி வளர்ச்சி பெறுகிறது எனப் பாருங்கள்:

| ஆண்டுகள் | திரும்பப் பெறும் தொகை | அதிகரிக்கும் அளவு |
|---|---|---|
| | ரூ. | |
| 7 | 2,008/- | 2 மடங்கிற்கு மேல் |
| 14 | 4,034/- | 4 மடங்கிற்கு மேல் |
| 18 | 6,010/- | 6 மடங்கிற்கு மேல் |
| 21 | 8,105/- | 8 மடங்கிற்கு மேல் |

அன்புப் பெற்றோர்களுக்கு "முத்துக் குவியல் டிபாசிட் திட்டம்" ஒரு அரிய வாய்ப்பு.




# தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிமிடெட்,

(ஷெட்யூல்ட் பேங்க் — ஸ்தாபிதம் 1921)

ரிஜிஸ்டர்ட் அலுவலகம்:
56, பீச் ரோடு, தூத்துக்குடி—628001

உங்களுக்குப் பணிபுரிய தமிழகத்தில் பல கிளைகள்

EP-TMB-103-R

ஆண்டாள் 'ரசிகனி'ன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் சொல்வது முழுதும் உண்மை என்று அதில் எழுதியிருந்தது !

''இன்னொரு சமயமும் ஆண்டாளின் கதை என் மனச் சோர்வை அகற்றி என்னை வாழ வைத்தது. ஒரு குற்றமும் செய்யாமல் அநியாயமாக உத்தியோகத்தை இழந்த வேளை அது. உடம்புக்கு வேறு வந்து படுத்துவிட்டேன். வீட்டில் தரித்திரம் பிடுங்கித் தின்றது. உற்றார், உறவினர் எல்லாம் மெல்ல நழுவினர். அம்மாவுக்குக்கூட நான் வேண்டாதவனாகிவிடுவேனோ என்று அஞ்சினேன். ஆஸ்பத்திரியில் நான் படுத்திருந்தது மூன்று வது மாடி. அங்கிருந்து குதித்துத் தீராத பிரச்னைகளுக்கெல்லாம் தீர்வு கண்டால் என்ன என்று யோசித்தேன். நல்ல வேளை ! எண்ணத்தைச் செயல்படுத்துவதற்கு முன் ஆண்டாளின் அற்புதமான கதை 'பொழுது விடியும்' கண்ணில் பட்டது. அந்தக் கதை என் சொந்தக் கதைதான் ! சிக்கலான பிரச்னைகளுக்குத் தீர்வு காணக் கதாசிரியை காட்டின வழியே தனி. அது என் நம்பிக்கையை ஆலமரமாக வளர்த்தது. ஆஸ்பத்திரியைவிட்டு வெளியே வந்தவன் துணிந்து ஒரு துணிக் கடை வைத்தேன். இலாபம் அபரிமிதமாக வந்தது. இன்று என்னிடம் செல்வம் கொழிக்கிறது. எனக்கு வழி காட்டினது ஆண்டாள் அவர்கள் எழுத்துத்தான் என்பதில் என்ன சந்தேகம் ?''

அவன் போய்விட்டான். இன்னொரு சமயம் ஆண்டாளைக் கட்டாயம் வந்து பார்ப்பதாகச் சொல்லிவிட்டுச் சென்றான்.

அவன் பேசிவிட்டுப் போன பேச்சு — குளத்தில் கல்லெறிந்தது போல் — ஆண்டாள் மனத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்களைக் கிளப்பிவிட்டிருந்தது. எல்லா எண்ணங்களையும்விட மேலோங்கி நின்றது பின்வரும் எண்ணம் தான்:

' சக்கர நாற்காலியில் சதா விழுந்து கிடக்கும் என் வாழ்க்கை பயனற்றது என்று எண்ணியது எத்தகைய பேதைமை ! பொழுதைக் கொல்வதற்காக நான் படைத்த கதைகளுக்கு இவ்வளவு சக்தியா ? சொந்தத் துயரை வெல்வதற்காக நான் எழுதினதெல்லாம் பிறர் துயரைத் துடைக்கும் என்று எதிர்பார்க்க வில்லையே ! வாழ்க்கைக்கு அர்த்தம் உண்டா என்றெல்லாம் இனி நான் ஆராய மாட்டேன். நான் எழுதப் பிறந்தவள்! அதுவே என் மூச்சு..... என் தர்மம்!'

அவள் மனத்தில் ஒளி பிறந்தது.

யாருக்கு யார் வெளிச்சம் காட்டினார்கள் ?



ஸ்ரீ S. K. N. ராகவன், (மானேஜர் I. C. காந்தி கம்பெனி, பம்பாய்) அவர்கள் குமாரன் சிரஞ்சீவி N. மாதவனுக்கும், மஹாராஷ்டிர முதன்மந்திரி காரியாலய அதிகாரி K. J. ஐயங்காரின் குமாரத்தி சௌபாக்கியவதி செம்பக லக்ஷ்மிக்கும், பம்பாய் கன்னடா ஸ்கூல் ஹாலில் சமீபத்தில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அஹோபில மடம் ஜீயர் ஸ்வாமிகள், ஏராளமான உறவினர்களும் நண்பர்களும் மற்றும் முதன்மந்திரி உள் பட அனைவரும் தம்பதிகளை இனிது வாழ ஆசிர்வதித்தனர். வாழ்க மணமக்கள்



சென்னை, ஷார்ட்லோ இந்தியா லிமிடெட்டின் விற்பனை நிர்வாகி ஸ்ரீ T. V. சீனுவாசன் அவர்கள் குமாரத்தி சௌ. மகாலட்சுமி என்கிற சந்தியாவுக்கும், ஸ்ரீ R. கிருஷ்ணசுவாமி அவர்கள் குமாரர் சிரஞ்சீவி K. V. கிருஷ்ணன் B. E. (புரொடக்ஷன் இஞ்சினீயர் அசோக் லேலண்ட், சென்னை)க்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்



மணக்கால் ஸ்ரீ M. V. சப்தரிஷி (Under Secretary,President's Secretariat, Rashtrapati Bhavan, New Delhi) அவர்கள் குமாரத்தி சௌ. ருக்மிணிக்கும்,
ஸ்ரீ C. P. கேசன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி L. P. வைத்தியநாதன், (Junior Engineer CIDCO., பம்பாய்) அவர்களுக்கும், சமீபத்தில் புது தில்லியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



பம்பாய் ஆக்ஃபா-கேவர்ட் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ கே. என். ராமஸ்வாமியின் புதல்வி சௌ. மாலதிக்கும், பம்பாய் லட்சுமி காலேஜ் ஆஃப் காமர்ஸைச் சேர்ந்த ஸ்ரீ ஆர். எஸ். சதாசிவ ஐயரின் புதல்வன் சிரஞ்சீவி வெங்கட்டுக்கும் சமீபத்தில் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்



## நான் வணங்கும் மனித தெய்வம் 15

# வேதத்துக்குச் சமமான வாக்கு!

**எ**னக்கு அப்பொழுது வயது ஆறு இருக்கும். 'ரத சப்தமி' தினம். கிணற்றடியில் என் தந்தை எனக்கு ஸ்நானம் செய்வித்து, விபூதியைக் குழைத்து இட்டுவிட்டு''உள்ளே போய்ப் பாட்டியிடம் சஹஸ்ரநாமம் கற்றுக் கொள், நான் ஜபம் செய்துவிட்டு வருகிறேன்'' என்று கூறினார். நான் உள்ளே ஓடி வரும்பொழுது எனது இடுப்பில் இருந்த துண்டு அவிழ்ந்து விட்டது. நான் வெற்று உடம்புடன் வந்ததைக் கண்ட எனது பாட்டி, ''இதென்னடா, சதாசிவம்போல் வந்து நிக்கறயே!'' என்றார். ''யார் அந்த சதாசிவம்?'' என்று விளையாட்டாகக் கேட்ட எனக்கு அவருடைய சரித்திரத்தைச் சொன்னாள் பாட்டி.

சென்ற வைகுண்ட ஏகாதசியன்று எனது உறவினர் ஊருக்குச் சென்றிருந்தேன். அங்கு தற்செயலாய், ஸ்ரீ சதாசிவ பிரும்மத்தின் சரித்திரம், பாடல்கள், புகைப்படம் எல்லாம் ஒருங்கே கிடைத்தன. ஏதோ புதையலைக் கண்டவன்போல் அவற்றை நான் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, ''இன்று நெரூரிலிருந்து, சதாசிவானந்தா வருகிறார்'' என்று கூறினார்கள். இந்தச் சொல் எனக்கு அதிர்ச்சியையும், ஆனந்தத்தையும் கொடுத்தது. அன்று மாலை நான் அவரிடம் சென்று, ஏதோ எனக்குத் தெரிந்த பிரம்மேந்திரரின் கீர்த்தனைகளைப் பாட விரும்புவதாகவும் ஆனால் முறைப்படி சங்கீதம் கற்றவன் அல்ல, ஏதோ ஓர் உத்வேகத்தால் பாடுகிறேன் என்றும் கூறினேன். அதற்கு அவர், ''இவருடைய கீர்த்தனங்கள் வேதத்துக்குச் சமானமாகும். இதைப் பாராயணம் செய்தாலே போதுமானது.'உனக்குத் தெரிந்த மட்டும் பாடு'' என்று கூறியதோடு, நான் பாடி முடித்தவுடன் இரு பாடல்களுக்குத் தமிழில் விளக்கமும் கொடுத்தார்கள். ''இவர் இயற்றிய பாடல்களில் சிலதான் பழக்கத்தில் உள்ளன. மற்றவை என்ன ஆகினவோ?'' என்று வருந்தினார்கள்.

திருகோகர்ணத்தில் உள்ள ஸ்ரீ பிரஹதம்பாளுக்கு சதாசிவப் பிரம்மம் மௌன மொழியில் அர்ச்சனை செய்யும் பொழுது ஒவ்வொரு பதத்துக்கும் ஒவ்வொரு மலராக அம்பிகையின் பாதங்களில் உதிர்ந்துள்ளது. தமது தபோவலிமையால் அம்மனுக்குக் கனக மணி மாலை ஒன்று சாற்றியுள்ளார். இந்த அம்மனுக்கு நெய் தீபம் வைக்கச் சொல்லிப் புதுக் கோட்டை மன்னருக்கு அறிவித்துள்ளார்; புதுக்கோட்டை மன்னரின் சந்தேகங்களைக் கேட்டு அவற்றுக்குப் பதிலை மணலில் எழுதிக் காட்டி, நிவர்த்தி செய்துள்ளார்.

இவர் எழுதிக் காட்டிய மணல் அரண்மனையில் பூஜிக்கப்படுகிறது. இவர் உத்தரவுப்படி புதுக்கோட்டை மன்னர் ''தசரா'' உற்சவம் நடத்தி வந்தார்.

தவப் புதல்வனாய்ப் பிறந்து, இள வயதிலேயே கற்க வேண்டியதைக் கற்றார். தக்க தருணத்தில் உபநயனம், அத்யயனம் நடந்தன. திருமணம் தாயாரின் தூண்டுதலால் நடந்தது. ஆனால் சிற்றின்பத்தில் இச்சையில்லாத சதாசிவம், தமது மனைவியை ஈசுவரி ரூபமாய்ப் பாவித்து, விலகி யிருந்து அந்தப் புனிதவதியின் அந்திமகாலத்தைத் தபோ வலியால் உணர்ந்து, மோட்சம் சித்திக்க வழிவகுத்தார். கடைசியாகத் தமது சரீரத்தை இந்தப் பூஉலகின் கண்ணிலிருந்து மறைத்துவிட எண்ணிய இடம் நெரூர் ஆகும். குறித்த நாளில் குகை அமைக்கச் செய்து, கண் மூடி, சுவாசம் உள்அடக்கி, இரு கைகளும் 'சின்' முத்திரையுடன் விளங்க மோனப் புன்னகையுடன் அதில் அமர்ந்து கொண்டார். கற்பூரம், விபூதி, பில்வதளம் முதலிய புனித வஸ்துக்களால் மஹானின் உடலை மூடி மறைத்தார்கள். முன்பே இவர் அறிவித்தபடிபோலச் சில தினங்களு'க்கெல்லாம் காசியிலிருந்து ஒரு பிரம்மச்சாரி சிவலிங்கம் ஏந்தி வந்தார். அது இங்கே பிரதிஷ்டை செய்யப் பட்டது. இங்குள்ள பில்வ மரத்தைப் பார்த்தால் நாகலிங்க புஷ்பம் போல் தோற்றம் அளிக்கிறது. சுற்றிலும் மணற்பரப்பாகவே விடப்பட்டுள்ளது. இந்த மகானின் பாத தூளிகள் பட்ட இடம் பல நூறு ஆண்டுகளாக இவரைத் தரிசிக்க வந்த எத்தனையோ மகான்களின் பாதங்கள்பட்டு மேலும் புனிதமாகியுள்ளது.

— ஆர். ஹரிஹரன்

ரேகா சந்திரநாத்

## 16. ரோஸியின் "தந்தை"

வெள்ளை வெளேர் என்று கோட்டும் பாண்டும் தரித்து, கழுத்தில் ஸ்டெதாஸ்கோப் ஊச லாட, வாசலில் நின்ற காரில் வந்து ஏறிக்கொண்டான் டாக்டர் கார்த்திக்.

பின்னாலேயே வந்த பட்லர் ரஹீம் பகலுணவு அடங்கிய கூடை யைப் பின் ஸீட்டில் வைத்து விட்டுக்கதவை அறைந்து சாத்தி னான்.

கார்த்திக்கின் உதடுகள் புன்ன கையைச் சிந்தின. "வரட்டுமா, ரமேஷ்—"

"என்ன ஸார், அதற்குள் மறந்து விட்டீர்களே! நான் இப்போது ரஹீம் அல்லவா?" என்றான் ரமேஷ்.

"ஓ, ஆமாம், மறந்தே போய் விட் டேன்...ஸாரி!"

"அதே மாதிரி நேற்று நான் சொன்ன தையும் மறந்துவிடப் போகிறீர்கள்! நான் உங்களிடம் வந்து ரொம்ப நாளாகிவிட்டது. என்னதான் முஸ்லிமாக வேஷம் போட்டுக் கொண்டிருந்தாலும், மனசு 'பக்,பக்' என்று அடித்துக் கொண்டேயிருக்கிறது. எந்த நிமி ஷம் போலீஸ் வந்து பிடித்துக்கொண்டு விடுமோ என்ற கவலையில் இராத் தூக்கம் கூட வரமாட்டேன் என்கிறது. சீக்கிரம் என் ஸிஸ்டர் இருக்கிற இடத்துக்கே என்னை யும் அனுப்பிவிடுங்கள், ஸார்!" என்றான் ரமேஷ்.

"ஏற்பாடு செய்து கொண்டுதான் இருக் கிறேன் ரமேஷ்! இப்போது உன் தங்கை வெளிநாட்டில் இருக்கிறாள். அங்கே நீ பாஸ் போர்ட் இல்லாமல் போக முடியாது. கள்ளத் தோணியில்தான் போக வேண்டும். காலம் நேரம் எல்லாம் பார்த்துத்தான் தோணி ஏற்பாடு செய்வார்கள்... தோணி புறப்படும் முன் தகவல் கொடுப்பதாக மிஸ்டர் விஜய் கூறியிருக்கிறார். இரண்டாவது, ரோஸியை வேறு அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்கிறாய்..." என்று சிரித்தான் கார்த்திக்.

"அவள் என்னில் பாதி சார்" என்றான் ரமேஷ்.

"ஏன் ரமேஷ்? முன்பு கூட உனக்கு ஒரு பெட்டர்-ஹாஃப் இருந்தா இல்லே?"

"அதை ஞாபகப்படுத்தாதீங்க ஸார்! அவ ளாலேதான் நான் இன்னிக்கு இப்படிக் கொலைகாரனாக அலைகிறேன்..ஆனா என்றும் என்னை நேசிக்கிறது ரோஸிதான் ஸார்."

"ஆட்சேபணை இல்லே. நானும் ஒரு காலத்தில் டாக்டருக்குப் படிச்சிக்கிட்டிருந் தப்போ ஒரு பெண்ணைக் காதலித்தவன்தான். பாவி, தனம் வந்து என் கனவைச் சிதற அடித்துவிட்டாள்" என்று பெருமூச்செறிந் தான் கார்த்திக். "அப்புறம் தாரிணி என்கிற விலங்கில் வேறு மாட்டிக் கொண்டுவிட் டேன்!"

"அதெல்லாம்தான் ஆண்டவன் கிருபை யால் 'கிளியர்' ஆகிவிட்டதே சார்...தாரிணி யம்மா தற்கொலை செய்துகிட்டாங்க. தனத்தை நான் குளோஸ் பண்ணி விட் டேன்!"

"அந்த நன்றிக்காகத்தானப்பா குற்ற வாளியான உனக்கு அடைக்கலம் கொடுத்து மாறுவேடத்தில் மறைத்து வைத்து இத்தனை நாட்களாகக் காப்பாற்றி வருகிறேன். ரமேஷ்! எனக்கு ஒரு சந்தேகம்."

"சொல்லுங்கள் ஸார்!"

"தாரிணி இறப்பதற்கு முதல் நாள்கூட நான் தனத்துடன் டெலிபோனில் பேசி னேனே! அவளை நீ அதற்குப் பத்து நாட்க ளுக்கு முன் கொன்றதாக ஜெயராம் சொன்னாரே — அது எப்படி?"

"ஜெயராம் தெரியாமல் சொல்லி யிருக்கிறார். டாக்டர் இறந்ததற்கு மறு நாள்தான் தனத்தை நானும் என் நண்பன் ஒருவனும் ஜோக்பால் ஸில் தள்ளிக் கொன்றோம்."

"உஷ்! மெதுவாகப் பேசு! காற்றுக்குக் கூடக் காது இருக் கும்" என்று சிரித்தான் கார்த்திக்.

ரமேஷ் வியப்புடன் கார்த் திக்கைப் பார்த்தான். முகத் தில் எவ்வளவு பிரகாசம்! அலை அலையாகக் கிராப்புத் தலை; நீள் சதுரமான மூக்குக் கண் ணாடி; வெள்ளை ஆடை; காலில் பூட்ஸ் — பழைய கோவிந்துவா இவன்?

வியப்பை மறைத்துக் கொண்டு ரமேஷ் கேட்டான்: "மிஸ்டர் விஜயனிடமிருந்து எப்போ ஸார் பதில் வரும்?"

"அட் எனி டைம்! ஒவ்வொரு நாளும் நான் எதிர்பார்த்துக் கொண்டேதான் இருக்கிறேன். சீக்கிரம் வந்துவிடும். இரண்டாவதாக நர்ஸிங் ஹோமில் டாக்டர் ரமணன் ரொம்ப மோசமான நிலையில் படுத்த படுக்கையாக இருக்கிறார். அவர் கவலையே எனக்குப் பெரிதாக இருக்கிறது... அடுத்த இரண்டு மூன்று நாட்கள் நான் அவர் அருகி லேயே இருக்கும்படியாகக்கூட இருக்கும். வீட்டைப் பார்த்துக்கொள்—"

''எஸ், ஸார்—'' கார் கிளம்பி நகர்ந்தது.

**கா**ர்த்திக்குக்கு இன்று ரொம்ப உற்சாகமாக இருந்தது. ஜோராக விசில் அடித்துக் கொண்டு கார் ஓட்டினால் என்ன என்று நினைத்தார். 'மல்லிகை... என் மன்னன் மயங்கும்...'' என்ற டியூனை 'ஹம்' பண்ணிக் கொண்டே ஆக்ஸிலேட்டரை அழுத்தினார்.

நியூ மார்க்கெட் வாசலில் கறுப்புக் கண்ணாடியும் தலைக் குட்டையும் குதிகால் பூட்சுமாக ரோஸி கையில் காய்கறிக் கூடையுடன் வருவது தெரிந்தது.

வண்டியை அவள் அருகில் கொண்டு போய் மெதுவாக நிறுத்தி ''ஹலோ, மிஸ் ரோஸி!'' என்றார். ''ஹலோ, டாக்டர்'' என்று வியப்புடன் திரும்பினாள் ரோஸி.

''இன்னிக்கு டியூட்டிக்குப் போகலையா? அம்மா எப்படி இருக்காங்க?''

''அம்மாவா? ராத்திரி முழுக்கத் தூங்காமே டாக்டரய்யா அறை வாசற்படியிலேயே உட்கார்ந்திருந்தாங்க... ஸார்! ஒரு சின்ன விஷயம்!''

''சொல்லு!—''

''என் அப்பா ஊரிலேருந்து வந்திருக்காரு. இன்னிக்கு ஒரு நாள் இருப்பாரு... லீவு போட்டிருக்கேன்... ஜோரா சமைச்சுப் போடணும் அவருக்கு...''

''போடறதெல்லாம் சீக்கிரம் போட்டுடு. துபாய்க்குப் போயிட்டா முடியுமா?'' என்று சிரித்தான் கார்த்திக். ''ஆக இன்னிக்கு நீ வரமாட்டே?''

''எஸ் ஸார்!'' என்றாள் ரோஸி. ''நாளைக்குக் கட்டாயம் வந்துடுவேன் ஸார்!''

''அம்மாவை யாரு கவனிச்சுக்கிறாங்க?''

''பகவதியைப் பார்த்துக்கச் சொல்லிட்டு வந்திருக்கேன் ஸார்... அம்மா இப்ப ஆல் ரைட் ஆயிட்டாங்க. தலைக்காயம் கூட நல்லா ஆறிப் போயிடுச்சு. டாக்டர் இப்படிப் படுத்துட்டாரே என்ற கவலைதான் இருக்கு.''

''டாக்டர் மாதிரி ஹாஸ்பிடலை யாரு கவனிப்பாங்கன்னு கவலையோ என்னமோ?''

''அதுக்குத்தான் நீங்க இருக்கிறீங்களே, ஸார்... டாக்டர் பக்கத்திலிருந்து நீங்க தானே ஸார், எல்லாத்தையும் நிர்வாகம் பண்ணிக்கிட்டு வர்ரீங்க... உங்ககிட்டே பெரிய டாக்டருக்கு இருக்கிற நம்பிக்கை



வேறே யாருகிட்டே இருக்கு ஸார்!'' என்றான் ரோஸி.

பெரிதாகப் பெருமூச்செறிந்தான் கார்த்திக். ''ரோஸி! நீ நம்பினால் நம்பு இல்லாவிட்டால் வேண்டாம். ஐந்து மாசத்துக்கு முந்தி இந்த உலகத் தொடர்பே வேண்டாம் என்று தலையை மொட்டை அடித்துக்கொண்டு காவி உடுத்திக்கொண்டு போனவன் நான். விதி என்னை இங்கே இழுத்து வந்து இத்தனை பெரிய சேவாலயத்தை என் தலையிலே கட்டிச் சேவை செய்யும்படி செய்திருப்பதை நினைத்தால் ஆச்சரியமாகவே இருக்கு—''

''உலகத்திலே எல்லாமே ஆச்சரியம் தான்னு எங்க அப்பா சொல்லுவாரு, டாக்டர்!'' என்ற ரோஸி, ''தாங்க்ஸ் டாக்டர், உங்களுக்கு டயமாயிடுச்சு!'' என்றாள்.

''தாங்க்யூ!'' என்றான் கார்த்திக் பிறகு, ''ரோஸி! ஒன் திங்... சீக்கிரமாக ஒங்க ரெண்டு பேரையும் துபாய்க்கு அனுப்பி வைக்கிறேன். நான் மறந்துவிடவில்லை... ரமேஷ் கிட்டச் சொல்லு... பை....'' — கார் நகர்ந்தது.

அடுத்த நிமிஷம் ''ரோஸி'' என்ற குரல் பின்னால் இருந்து கேட்டது. ரோஸி திரும்பினாள். கிழிந்த கோட்டும், பெரிய தொப்பியும், நரைத்த தாடியும் மீசையுமாக உடைந்த கண்ணாடியுடன் ஒரு கிழவன் நின்றான்.

''டாடி! அதுக்குள்ளே ஏன் வந்தீங்க? அவன் உங்களை அடையாளம் தெரிஞ்சுக்கிட்டான்னா?'' என்று பதறினாள் ரோஸி,

''காலையிலே உன்னாலேயே தெரிஞ்சுக்க முடியல்லையே? அவனாலேயா தெரிஞ்சுக்க முடியப் போகிறது? அவன் இப்ப எப்படி இருக்கான்னு பார்க்கணும் போலிருந்தது ரோஸி. அதுதான் கார் மறையறதுக்குள்ளே வந்தேன்'' என்றான் கிழவன்.

''சரி வாங்க, அறைக்குப் போய்ப் பேசலாம்!''

''வேண்டாம். அதோ அந்தப் பார்க்கிலே போய்ப் பேசுவோம்'' — இருவரும் பார்க்கை நோக்கி நடந்தார்கள். பார்க்கில் ஓர் ஈ காக்கை இல்லை. ஒரு பெரிய மரத்தின் நிழலில் உட்கார்ந்து ஒரு கொத்து வேர்க் கடலையைக் கைக்குட்டையில் விரித்துக் கொண்டு, ''சொல்லு ரோஸி! எதுக்காக அவசரமாக வரச் சொல்லித் தந்தி கொடுத்தே! எனி திங் ராங் ஹியர்?'' என்று கேட்டான் கிழவன்.

''எத்தனையோ கோளாறுகள் ஸார்..... ஒன்றா இரண்டா? இரண்டு நாளா இங்கே என்னமோ பயங்கரமாக நடக்கப் போகுதுன்னு தோணுது ஸார்—''

''என்ன சொல்லறே நீ?''

''ஸார், கொஞ்சம் குரலைக் குறைவாகவே வைச்சுக்குங்க ஸார்! யாராவது கேட்டா குரலுக்கும் உருவத்துக்கும் சம்பந்தமே இல்லேன்னு நினைச்சுக் கிட்ட வந்து உங்க தாடியைப் பிடிச்சு உலுக்கிறாங்கன்னா — அது கையோடு வந்துடும். அப்புறம் இன்ஸ்பெக்டர் சேகரா நிப்பீங்க!'' என்று சிரித்தாள் ரோஸி.

''பயப்படாதே ரோஸி! என் தாடியை அவ்வளவு இலேசா யாரும் அசைச்சுட முடியாது!'' என்ற சேகர், ''ரைட், மேலே சொல்லு!'' என்றான்.

''ஸார்! இந்த நர்ஸிங்ஹோமிலே என்னமோ நடக்கப் போகுது. இந்தக் கார்த்திக் ஏதோ பெரிதாகப் பிளான் போடுகிறான். அவன் முகமும் பார்வையும் கொஞ்சம் கூட நன்றாக இல்லை. வந்த ஆறு மாதங்களுக்குள் பெரிய டாக்டரைக் கைக்குள் போட்டுக் கொண்டு விட்டான்.''

''இதெல்லாம் எப்படிச் சாத்தியமாச்சு?''

''இதே கேள்வியை நானும் இங்கே வந்ததும் கேட்டுக் கொண்டு விடையைத் தேடினேன். பல ரசமான தகவல்கள் கிடைத்தன. எல்லாவற்றையும் 'எடிட்' செய்து சேர்த்தால் ஓர் அருமையான கதையாகிவிடும்!''

''எனக்குக் கதை கேட்க ரொம்பப் பிடிக்கும். ஆரம்பி.''

''இந்த நர்ஸிங்ஹோம் ஒரு பெரிய எஸ்டேட். உள்ளே போனா பெரிய பல்கலைக் கழகம் மாதிரி இருக்கு; மெயின் ஹாஸ்பிடலுக்குப் பக்கத்திலேயே பெரிய டாக்டரோட பங்களாவும் இருக்கு. இத்தனை பெரிய சொத்துக்கு அதிபரான டாக்டர் ரமணனுடைய சொந்த வாழ்க்கை ஒரு டிராஜடி.''

''நிர்மலாவைப் பற்றிச் சொல்லு.''

''நிர்மலா பாவம், வாழ்க்கையிலே ரொம்பவும் ஏமாந்துவிட்டாள். இந்த டாக்டரை மணந்துகொண்டு இங்கே வருவதற்கு முன்பு, ஒரு ஸ்டூடண்டாக இருந்தபோது இந்த கார்த்திக் மீது உயிரையே வைத்திருந்தாளாம். பின்னர் என்ன காரணத்தாலோ அவர்கள் பிரிந்து நிர்மலா டாக்டர் ரமணனுடைய மனைவியாக வந்து விட்டாள். ஐந்து வருடம் அவருடன் மகிழ்ச்சியில்லாமலே குடித்தனம் நடத்தினாள். அதே சமயம் டாக்டரின் தூய அன்பையும் அவளால் தள்ள முடியவில்லை. ஓர் இருமுனைப் போராட்டமே அவள் மனத்துள் நிகழ்ந்தது. அந்தப் போராட்டம் தானவே முடியாது போன ஒரு நாள் மாலை, டாக்டர் தம் சகாக்களுடன் மைதானத்தில் டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தபோது இவள் மாடியிலிருந்து கீழே விழுந்து உயிரை விட்டு விட முயன்றாள்.''

''ஐயோ, பாவம்!'' என்றான் சேகர்.

''அதற்குச் சில நாட்கள் முன்புதான், நிர்மலா இங்கே இருப்பதைத் தெரிந்து கொண்ட கார்த்திக் தன் டாக்டர் சன்னதுகளை யெல்லாம் சேகரித்துக் கொண்டு இங்கே வந்து, நர்ஸிங்ஹோமில் குட்டி டாக்டராகச் சேர்ந்திருந்தான். டாக்டர் இல்லாத நேரமாகப் பார்த்து நிர்மலாவைப் பார்க்க வந்தான். அவன் வந்த அதே சமயம்தான் நிர்மலா மாடியிலிருந்து குதித்ததும் நிகழ்ந்தது....''

''விதி எப்படிக் கொண்டு வந்து சேர்க்கிறது!'' என்றான் சேகர்.

''கரெக்ட் ஸார். விதிதான் அவனைக் கொண்டு வந்து சேர்த்தது. அவன் உட



'பிளாஸ்டிக் சர்ஜரி' மூலம் சேதமடைந்த உடலுறுப்புக்களைப் பல சந்தர்ப்பங்களில் சரி செய்து கொள்ளுகிறார்கள். மூக்கு, காது இவற்றின் அழகை அதிகரித்துக் கொள்வதும் வெளிநாடுகளில் இப்போது சர்வசாதாரணமாக இருக்கிறது. அமெரிக்காவிலுள்ள பல பெண்கள் ஆவாகார்ட்னர் என்ற நடிகையின் கன்னத்தில் விழும் குழிபோல் தங்கள் கன்னங்களிலும் குழி விழ வைத்துக் கொள்கிறார்கள். டாக்டர்கள் அதற்கு 150 டாலர்கள் வாங்குகிறார்கள்!

— 'டெக்கான் ஹெரால்ட்' - அனிதா ராமச்சந்திரன்

பெரும்பாலான கேசச் சாயங்கள் மங்கிவிடக் காரணம்
அவை உரோமத்திற்கு வெறும் மேல் பூச்சுப் போடுகின்றன.

# ட்ரு-டோன்

## ஒவ்வொரு உரோமத்தையும் ஊடுருவுகிறது, மேம்பட்ட நிரந்தர இயற்கைப் பொலிவை அளிக்கிறது உங்கள் கேசத்திற்கு

ட்ரு-டோனில் உள்ள சிறப்பான சத்துக்கள், உரோமத்தின் (க்யூட்டிகிள்) புறத் தோலைத் திறந்து கொண்டு, உட்புற கார்ட்டெக்ஸ் பகுதியை ஊடுருவி அதனுள் அதிவிரைவில் ஈர்க்கப்படுகிறது... எனவே உங்கள் கேசத்திற்கு மேம்பட்ட நிரந்தர இயற்கைப் பொலிவு வந்தடைகிறது.

ட்ரு-டோன் தயாரிப்போர்: ஹெலன் கர்ட்டிஸ்— உரோம ரசாயனத்திலே தலைசிறந்த அறிவாளிகள்



இதர சாயங்கள் பலவலாகத் தான் செயல்படுகின்றன. எனவே, அதிவிரைவில் மங்கி விடுகின்றன.

க்யூட்டிகிள்
கார்ட்டெக்ஸ்
மெடுலா

ட்ரு-டோன் உரோமத்தின் அடிமுக்கியப் படலமான கார்ட்டெக்ஸ் பகுதியை ஊடுருவுகிறது.

உரோமத் தண்டு




லிக்விட்

நீங்கள் தேர்ந்தெடுக்க:
ட்ரு-டோன் லிக்விட் ஹேர் டைய
மற்றும் வடியாது படியும் கேசச்
சாயமான ட்ரு-டோன் ஜெல்.

உங்கள் கேசத்தைப் பளபள மென்மையோடு படிமானமாக வைப்பதற்கென, இரண்டுமே உள்ளமைப்பான ஹேர் கண்டிஷனர் அடங்கியவை.




ஜெல்

கேசத்திற்கு முதல் தடவையாக சாயமிட உத்தேசமா? எழுதிப் பெறுங்கள் **இலவசக்** கைப்புத்தகம்: ''ஹேர் டையிங் எக்ஸ்ப்ளெயின்டு''
ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் லிட்., ... பம்பாய் 400 038.

கருநிறத்திலும் கருஞ் சிவப்பிலும் கிடைக்கிறது.
ஆடவருக்கென விசேஷ பேக்.

everest/269/JKH-tm.

மற்ற விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்:
M/s. பாரி & கோ., லிட்., சென்னை ○ M/s. G. அதர்ட்டன் & கோ., பிரைவேட் லிமிடெட், கல்கத்தா ○ மார்க்கெட்டிங் டிவிஷன்: M/s. J. K. ஹெலன் கர்ட்டிஸ் லிட்., பம்பாய் & புது டெல்லி



## வானவில்லின் வனப்புமிக்க வண்ணங்களை எட்டிப் பிடித்து

## உங்கள் இல்லங்களில் இட்டு நிரப்பவே

எழில் கொஞ்சி நிற்கும் இயற்கை அழகினை மிஞ்சிட முனையும் போது, கைதேர்ந்த கலைநுட்பமும் கச்சிதமான அனுபவப் பாங்கும் இணைசேர வேண்டும்.

இந்த முன்னணித் திறமை இயோமைட் தனக்கென்றே நிலைநாட்டியுள்ள முத்திரைச் சிறப்பாகும்.

இயோமைட் பெயிண்ட்கள் மட்டுமே இயற்கை வனப்பிற்கு இணையான வண்ணங்களை, சாயல்களை, நிறக்கலவைகளை உங்களுக்குப் படைத்தளிக்க வல்லவை.

இவைகளைப் பயன்படுத்திப் பார்த்திருப்போரை இப்போது கேட்டுப் பாருங்கள், இனி எப்போதும் நீங்கள் தப்பாமல் தேடுவீர்கள் இயோமைட்.

# இயோமைட் பெயிண்ட்ஸ்




bp




பிளண்டெல்—
பெர்மோக்ளேஸ் குரூப்

இதனைத் தயாரிப்பது

**பிளண்டெல் இயோமைட் பெயிண்ட்ஸ் லிட்.**

பதிவு அலுவலகம்:
ருஸ்தம் பில்டிங், வீர் நரிமன் ரோட், பம்பாய்-400001
கிளைகள்: தாணா, அஹமதாபாத், டில்லி, கான்பூர், சண்டிகார், கல்கத்தா, பெங்களூர், சென்னை, கொச்சின் மற்றும் ஹைதராபாத்.

**சேவையும் தரமும் சேர்ந்த வண்ணக் கலவை!**

VENART/GAA/TM

னேயே முதலுதவி செய்து அவனைக் காப்பாற்றி விட்டான். அதிலிருந்து டாக்டருக்கு அவனிடம் அபாரப் பிரியம், மதிப்பு, நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தம்மிடம் அசிஸ்டெண்டாக இருந்த அவனைத் தனக்கு அடுத்தபடியாகவே நியமித்து அவனிடமே எல்லாப் பொறுப்புக்களையும் ஒப்படைத்து விட்டார்.''

''அதிர்ஷ்டசாலிதான் இந்தக் கார்த்திக்!'' என்றான் சேகர்.

''அதிர்ஷ்டம் மட்டும் இல்லை. சந்தர்ப்பமும் சேர்ந்து கொண்டது. நிர்மலா விழுந்தது தற்செயலாக அல்ல. தற்கொலை முயற்சிதான் என்று டாக்டர் அறிந்து கொண்ட அன்றே அவருள் இடி விழுந்துவிட்டது. நிர்மலா எவ்வளவு மறுத்தும் அவள் தவறி விழுந்துவிட்டதாக டாக்டர் நம்பவே யில்லை. அதிலிருந்து அவர் ஒரு நோயாளியாகவே ஆகிவிட்டார். திடீர் திடீரென்று மயங்கி விழ ஆரம்பித்தார். அப்போதெல்லாம் இன்ஜெக்ஷன் போட்டு அவரைக் காக்க டாக்டர் கார்த்திக்தான் அரும்பாடு படுவார்''

''இதில் தவறு ஒன்றுமில்லையே!''

''தவறு இனிமேல்தான் வரப் போகிறது ஸார். இப்போ நிர்மலா பழைய நிர்மலா இல்லே. அவள் மனசு மாற ஆரம்பிச்சிடுச்சு. டாக்டர் கார்த்திக் பெரிய டாக்டரைப் பார்க்க வரும்போதெல்லாம் நிர்மலாவைத் தனியாகச் சந்திக்கிறார். ஒரு நாள் 'டாக்டர்! என்னை ஏன் காப்பாத்தினீங்க. அப்பவே சாகறத்துக்கு ஓர் இன்ஜக்ஷன் போட்டு என்னைக் கொன்றிருக்கக் கூடாதா?' என்று நிர்மலா அழுததைக் காதாலே கேட்டேன். 'என்னாலே இந்த இரட்டை வாழ்க்கை வாழ முடியலையே'ன்னு கதறினாங்க. 'என்னை எங்கேயாவது கூட்டிக்கிட்டுப் போயிடுங்களேன். உங்க கூட உலகத்தின் எந்தக் கோடிக்கும் நான் வரத் தயார்'ன்னு அழுதாங்க.''

''கார்த்திக் என்ன சொன்னார்?''

'' 'அதெல்லாம் கூடாது. நான் தப்புக் காரியம் என்னிக்குமே பண்ண மாட்டேன்! சாமியாப் பார்த்துச் சேர்த்து வைச்சா வைக்கட்டும்'ன்னு சொன்னார்!''

''பெரிய டாக்டருக்கு இவங்க மேலே சந்தேகம் வரலையா?''

''எப்படி வரும்? அவர் நிர்மலா அம்மா விழுந்த அன்னைக்கு ''ஹா''ன்னு சத்தம் போட்டுக் கொண்டு விழுந்தவர்தானே! அப்புறம் அடிக்கடி படுத்துப் படுத்து எழுந்துக்கிட்டிருந்தார். இப்ப பத்து நாளா அதுவும் கிடையாது. பிரக்ஞை கூட அடிக்கடி போயிடுது. இப்ப அவர் படுத்திருக்கிற அறையிலே யாருமே போகிறதில்லே... நிர்மலா அம்மா இல்லாட்டாக் கார்த்திக் மட்டும்தான் போவார். சாயங்காலம் டியூட்டி முடிஞ்சு போகிற டாக்டருங்க எல்லாம் மரியாதைக்காக வந்து தூர நின்னு பார்த்துட்டுப் போவாங்க.''

''அப்ப டாக்டர் கார்த்திக்கும் கூடவே இருப்பாரா?''

''இருப்பாரு.''

''ஹும்!''.

''இதிலே இன்னொரு வேடிக்கையும் இருக்கு. அதுதான் எனக்குப் புரியலே. 'ஒங்க கூட எங்கே வேணும்னாலும் ஓடி வரேன்'ன்னு கார்த்திக்கிட்டே சொன்ன நிர்மலா அம்மா இப்ப டாக்டர் காலடியிலேயே உட்கார்ந்து, 'கார்த்திக்! அவரை எப்படியாவது காப்பாத்திவிடேன்' என்று அழறாங்க!''

''என்னது?''

''ஆமாம். 'ஆயிரம் இருந்தாலும் அவர் என்னைத் தொட்டுத் தாலி கட்டிய புருஷன்; நல்லவர்'ன்னு புலம்பறாங்க! அவங்க அப்படிப் புலம்பறதைப் பார்த்தா டாக்டர் கார்த்திக்கோட முகம் பயங்கரமாக இருக்கு. 'நிர்மலா! நம்மால் முடிந்ததைத்தான் செய்யலாம். வாழ்நாளோ மரணமோ நம் கையில் இல்லே' என்கிறார். 'ஐ வில் டிரை மை பெஸ்ட்' என்கிறார். ஆனால், ஸார்! ஹி இஸ் டூயிங் ஹிஸ் ஒர்ஸ்ட் என்று தோன்றுகிறது.''

''ஹௌ? எப்படி?''

''இதோ இது — நேத்து டாக்டர் ரமணனுடைய 'பெட்' அடியிலே குப்பைக் கூடையிலே கிடந்தது'' — ரோஸி காய்கறிக் கூடையில் தேடி ஒரு சிறு காகிதப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தாள். அதற்குள் இருந்த சின்னஞ் சிறு இன்ஜெக்ஷன் மருந்து காலிப் புட்டியைக் கண்டதும் சேகர் திடுக்கிட்டான்.

அது மெர்ஸி கில்லிங் கேஸ்களில் பயன்படுத்தும் ஒரு வகை விஷத்தின் காலிக் குப்பி. ஓ! இது ஏன் வந்தது டாக்டர் ரமணனின் அறைக்குள்?

''இதே மாதிரி ஒரு புட்டி போன வாரமும் அதே கூடையில் கிடந்தது ஸார்!'' என்றாள் ரோஸி.

(தொடரும்)



Aழுத்துச் சிரிப்பு!
கருத்து: கொ. வெ. காரிகை.
"யாரு? கோடு வீட்டுக்காரு! தெரியாமல் நிக்கிறீங்கடா? என்ன சமாசாரம்?"
எதற்கெடுத்தாலும் சிந்திக்காமலே ஆமாம் போடுவது உனக்கும் பிழைப்பாயிடுச்சு!
என்ன! உனக்கும் அலர்ஜியாம். உனது மகனுக்கும் அலர்ஜியாமா? டாக்டரிடம் போவது தானே!
"நீ என்றைக்குத்தான் பாஸ் மார்க் வாங்கியிருக்கே? உனக்கும் படிப்பிற்கும் வெகு தூரம்! தூர ஓடிப்போ!!"
நம்மகிட்டே வால் ஆட்டாதே! நறுக்கிடுவேன் நறுக்கி!!
யோகாசனமா செய்யறே?
நம்பி



# ஒரு சல்லிக்

இந்தக் குடும்பத்துல நானும் ஓர் உறுப்பினள் என்ற நினைப்பு யாருக்குமே இருப்பதாகத் தெரியவில்லை. என் கணவர் செய்த தவற்றுக்கு — அல்லது அந்தத் தவறு நேர்வதற்குக் காரணமாக இருந்த என் தலைவிதிக்கு— நான் எவ்வாறு பொறுப்பாளேன் என்பதும் எனக்குப் புரியவில்லை. இந்தக் குடும்பத்தில் நான் அடியெடுத்து வைத்த நாளிலிருந்து இன்று வரையில் என்னையும் உணர்ச்சிகளும் விருப்பு வெறுப்புக்களும் உள்ள ஒரு மனித உயிராக எண்ணி மதிப்பதற்கு யாருமே இல்லை என்பதை எண்ணிப் பார்க்குந்தோறும் என் மனம் கைக்கிறது. நான் இவரைக் கைப்பிடித்த நாள் முதலாக இன்றளவும் கேவலம் ஒரு சமையற்காரிக்கு உரிய அற்ப உரிமைகளைக்கூட அனுபவித்ததேயில்லை என்பதை நினைத்தாலே 'நான் வாழ்ந்த வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?" என்றே வெறுப்பு வருகிறது. ஆழ்ந்து யோசிக்கும்போது அப்பா செய்த தவற்றின் பயனை நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேனே என்றே நினைக்கத் தோன்றுகிறது. அப்பாவுக்கு இரண்டாந்தாரமாக ஓர் இளம் பெண் எங்கள் குடும்பத்தில் சேர்ந்தபோது எனக்கும் என் தம்பிக்கும் முறையே பத்து வயசும் எட்டு வயசும் ஆகிக் கொண்டிருந்தன. அவளைச் சித்தி என்று அழைக்குமாறு எங்களிடம் அப்பா சொன்னார். நாங்களும் அப்படியே அழைத்தோம். ஆனால் நான் புகுந்த இடத்திலோ என்னை எந்த உறவையும் சொல்லி அழைக்காமல் மொட்டையாகவே என்னுடன் இதுவரையில் பேசி வந்துள்ளார்கள். என் மீது எவ்வளவு வெறுப்பு இருந்திருந்தால் இப்படி ஓர் ஒட்டாத் தன்மையுடன் என் கணவரின் மூத்த தாரத்துக் குழந்தைகள் என்னிடம் நடந்து கொண்டிருப்பார்கள் என்பதை நினைத்துவிட்டாலே நெஞ்சு கசந்து போகிறது.

எங்கள் அம்மா இறந்து போய்ச் சில நாட்கள் வரையில் இருண்டு கிடந்த வீட்டுக்குச் சித்தி வந்து விளக்கேற்றத் தொடங்கியதும் எங்கள் வீடே புதுப் பொலிவு கொண்டு துலங்கத் தொடங்கியதாக நாங்கள் நம்பினோம். நானும் தம்பியுமாகச் சேர்ந்து



ஆமைக்குப் பல்
குதிரைக்குப் புருவம்
முயலுக்குக் கண் இமைகள்
கிடையா!

கொண்டு அப்பாவின் பல வேலைகளில் பங்கு கொள்ள வேண்டியிருந்த தொல்லையிலிருந்து காப்பாற்றப்பட்டதால் மட்டுமே அந்தப் பொலிவு ஏற்பட்டதாகச் சொல்லிவிடுவதற்கில்லை. சித்தி வந்ததன் பிறகு வீடே மங்களகரமாக ஆயிற்று என்பதில் ஐயமில்லை. ஏனென்றால் நாக்கு செத்துக் கிடந்த எங்களுக்கு அவள் வந்ததன் பிறகுதான் வாய்க்குச் சுவையாகச் சாப்பாடும் தின்பண்டங்களும் கிடைக்கலாயின. அவள் வந்ததன் பின்னர்தான் நாங்கள் துப்புரவாக உடை உடுத்த முடிந்தது. இதனால் அக்கம்பக்கத்தில் சித்திக்கு எதிராக எங்கள் குழந்தை உள்ளங்களில் நஞ்சு கலக்க முயன்றபோது போக்கற்ற பெண் பிள்ளைகளின் ஜபம் எங்களிடம் சாயவில்லை. நாங்கள் சித்தியை நேசிக்கத் தலைப்பட்டோம். இதனால் நானும் ஒரு சித்தியாக வாழ்க்கைப்பட வேண்டிய நிலை ஏற்பட்டபோது அது அப்படியொன்றும் இகழ்ச்சிக்கோ அல்லது வருத்தத்துக்கோ உரிய ஒன்றாக எனக்குப் படவே இல்லை. நான் மணக்கவிருந்தவர் என்னைக் காட்டிலும் இருபது வயது மூத்தவர் என்பதும் அவருக்கு நான்கு குழந்தைகள் என்பதும் கொஞ்சம் என்னைக் கலக்கினாலும், என்னை வெறுப்பதற்கு என் கணவரின் குழந்தைகள் முற்படக்கூடும் என்ற சாத்தியக்கூறு எனக்குத் தோன்றாமற் போயிற்று. உண்மையில் சித்தி கிட்டத்தட்ட ஒரு தாய் மாதிரி எங்களையெல்லாம் பராமரித்தது போன்றே நாமும் நம் கணவரின் மூத்ததாரத்துக் குழந்தைகளைப் பேணி வளர்த்து உற்றார் உறவினரிடமும், அந்தக் குழந்தைகளிடமும்-- எல்லாவற்றுக்கும் மேலாக என் கணவரிடமும் — நல்ல பேர் எடுக்க வேண்டும் என்ற பொறுப்பு உணர்ச்சியுடன்தான் நான் இந்தக் குடும்பத்தில் புகுந்தேன்.

ஆனால் நான் எவ்வளவுக்கெவ்வளவு அவர்களிடம் நல்ல பேர் எடுக்க முயன்றேனோ அவ்வளவுக்கவ்வளவு அந்தக் குழந்தைகளின் வெறுப்பைத்தான் நான் சம்பாதிக்க நேர்ந்தது. என் கணவர் மட்டும் என்னிடம் கொள்ளை அன்பு கொண்டிருந்தார். நான் நினைத்திருந்தால் குழந்தைகளைப் பற்றி அவரிடம் அவ்வப்போது புகார் சொல்லி எனக்கு அந்தக் குடும்பத்தில் நியாயமாகக் கிடைக்க வேண்டிய மதிப்பையும் மரியாதையையும் வலுக் கட்டாயமாகப் பெற்றிருக்க முடியும். ஆனால் அம்மாதிரியான வழிகளில் நான் இறங்கவில்லை. ஏனென்றால் நான் வளர்ந்த வழி அத்தன்மையது.

காலப்போக்கில் எனது நல்ல தன்மைகளை அவர்கள் தாங்களாகவே புரிந்து கொள்வார்கள், அதற்குப் பிறகு எனக்குரிய மரியாதையைக் காட்டுவார்கள் என்றெல்லாம் எண்ணி நான் பொறுமையாகக் காத்திருந்தேன். ஆனால், நாளாக நாளாக நான் கண்டது நேர்மாறான விளைவுதான். வயது ஏற ஏற அவர்கள் என்னை மிகுதியாக வெறுக்கத் தலைப்பட்டார்கள்.

நேற்றுத்தான் நடந்தது மாதிரி இருக்கிறது. நான் இந்தக் குடும்பத்தில் அடி எடுத்து வைத்த அன்று மூத்தவள் ரமாவுக்கு வயது பதினொன்று. அடுத்தவனுக்குப் பன்னிரண்டு. அதற்கும் அடுத்தவனுக்குப் பத்து. நான்காவது பெண்ணுக்கு ஏழு வயசு. எல்லாமாகச் சேர்ந்து கொண்டு அன்று என்னைப் படுத்தி வைத்த பாடு கொஞ்ச நஞ்சமில்லை. இவர் இல்லாத நேரங்களில் வெளிப்படையாகவே எல்லாமாகச் சொல்லி வைத்துக் கொண்டு எனக்கு அழகு காட்டும். கூப்பிட்ட நேரத்தில் சாப்பிட வராமல் என் கழுத்தை அறுக்கும். நான் தொடாதபோதே அடித்து விட்டதாகச் சொல்லி ஊரைக் கூட்டிடும்.

எங்கள் தகப்பனார் இன்னும் கொஞ்ச நாட்கள் வாழ்ந்திருந்தால் ஒருகால் இப்படி ஒரு வாழ்க்கைக்கு நான் உட்பட நேர்ந்திராதோ என்னவோ? சொற்பச் சேமிப்புடன் அவர் திடீரென்று இறந்துபோனதால், சித்தி என்னை இரண்டாந்தாரமாகத் திருமணம் செய்து கொடுக்க முற்பட்டாள். 'இதைவிட நல்ல இடம் எனக்குக் கிடைக்க வழி இல்லை' என்றாள். இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டதில் தனக்கு ஒரு கேடும் வந்துவிடவில்லை என்று எடுத்துச் சொன்னாள். என் தகப்பனார் பணக்காரர் இல்லை என்பதையும் ஆனால் எனக்குக் கணவராக வரவிருந்தவரோ ஆயிரக் கணக்கில் சொத்துக்கு உரியவர் என்பதையும் ஒப்பிட்டுக் காட்டி என்னை இணங்கச் செய்தாள். என் கணவரின் குழந்தைகளிடம் அன்பாக நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவுரை கூறினாள். கணவனே தெய்வம் என்றும் குழந்தைகளோடு தகராறு செய்து கொண்டால் அவர் வாழ்க்கை நிம்மதியற்றுப் போகும் என்பதை நினைப்பில் கொண்டு எனக்குரிய கடமைகளைச் செவ்வனே செய்து கொண்டு சாதுவாக வாழவேண்டும் என்றும் புத்திமதி சொன்னாள். கிட்டத்தட்ட ஒரு தாய்க்கு ஈடான சித்தியின் சொற்களை நான் சிரமேற்கொண்டேன். அவள் சொல்லி வைத்திருந்த ஒவ்வோர் அறிவுரைப்படியும் நடந்தேன். ஆனால் எனக்கு என் கணவரின் குழந்தைகளிடம் நல்ல பேர் கிடைக்கவில்லை.

ஆயிற்று. இந்தக் குடும்பத்தில் நான் நுழைந்து இருபது ஆண்டுகள் ஆகிவிட்டன.

# காசுகூட வேண்டாம்!

—ஜோதிர்லதா கிரிஜா—



"இதற்கு முன்னால் இருந்த கம்பெனியில் உனக்கு எவ்வளவு சம்பளம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்?"

"ஆயிரம் ரூபாய் சம்பளம், இருநூறு ரூபாய் வாடகை அலவன்ஸ், லாண்டரி அலவன்ஸ், வைத்திய வசதி, குழந்தைகளுக்குப் படிப்பு வசதி, கோடை பயண வசதி எல்லாம் கொடுத்தார்கள்."

"அந்தக் கம்பெனியைப் பின்னே ஏன் விடுகிறாய்?"

"அது திவாலாகிவிட்டது!"

—கோட்டா மோகன்

---

எனக்குக் குழந்தை பிறக்கவில்லை. இரண்டு தடவை கருச் சிதைவு ஏற்பட்டதோடு சரி. குழந்தைக்கு ஏங்கிய நான் கணவரின் மூத்ததாரத்துக் குழந்தைகளை முன்னிலும் அதிகமாக நேசித்தேன். ஆனால் கண்ட பயன் தான் நேர்மாறானது.

...ரமாவுக்குக் கல்யாணமாகிப் பதினைந்து வருடங்கள் ஆகின்றன. அவளுக்கு மூன்று பெண்களும் இரண்டு பையன்களும் இருக்கிறார்கள். குழந்தை பெறாத நான் கண்ணைப் போடுவேன் என்பதால் அவள் பெரும்பாலும் தன் குழந்தைகளை இங்கே அழைத்துக் கொண்டு வருவதில்லை. அப்படி வந்தாலும் இரண்டொரு நாட்களுக்கு மேல் தங்குவதில்லை.

அடுத்தவன் ரவிக்கு மணமாகிப் பத்து ஆண்டுகள் ஆகின்றன. அவனுக்கும் இரண்டு பெண்களும் இரண்டு ஆண் குழந்தைகளும் இருக்கின்றன. மூன்றாமவனுக்கு மணமாகி விட்டது. இரண்டு பிள்ளைகள். நான்காவது பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடிக் கொண்டிருக்கிறோம். எதனாலோ ஒன்று மாற்றி ஒன்றாகத் தட்டிப் போய்க் கொண்டே யிருக்கிறது.

.....கடந்த நான்கு நாட்களாக இவர் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார். எந்த நேரமும் எதுவும் நேரலாம். அப்படி எதுவும் நேராமல் இவர் பிழைத்துக் கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய வேண்டுகோளாக இருந்தது.

**நா**ன்கு நாட்களுக்கு முன்னால் நான் கோவிலுக்குப் போயிருந்த நேரத்தில் இவர் அலுவலகத்தில் மயக்கம் அடைந்து விட்டதாகவும் உடனே இவரை ஆஸ்பத்திரியில் சேர்த்திருப்பதாகவும் தகவல் வந்ததாம். மூத்த பெண்ணும் பிள்ளையும் நல்ல வேளையாக விடுமுறையில் வந்திருந்தார்கள். சேதி வந்ததும் எல்லோருமாக உடனே கிளம்பிப் போய்விட்டார்கள். எதிர் வீட்டில் சாவியைக் கொடுத்து விட்டுப் போய்விட்டார்கள். விஷயம் இன்னது என்பதைக் கூடத் தெரிவிக்காமல் போயிருக்கிறார்கள். கோயிலிலிருந்து திரும்பிய என்னிடம் எதிர் வீட்டினர் சாவியைக் கொடுத்தார்கள். நான் ஏதோ சினிமாவுக்குத் தான் எல்லாரும் போயிருக்கிறார்கள் போலும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இரவு பத்து மணிக்குத் திரும்பிய அவர்கள் சேதியை அரை மனத்துடன் சொன்னபோது எனக்கு வந்த ஆத்திரத்துக்கு அளவே யில்லை. என் கணவர் பல நாட்களில் மிகவும் நேரம் கழித்து வருவது உண்டாகையால் நான் கவலைப்படாமல் இருந்தேன். எதிர் வீட்டில் சாவியைக் கொடுத்தவர்கள் அவர்களிடம் இன்ன விஷயம், இன்ன ஆஸ்பத்திரியில் என் கணவர் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்பதைக் கூடச் சொல்லாமல் போயிருக்கிறார்களே என்பதை நினைத்துத்தான் நான் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தேன். உடனே நான் கிளம்பியபோது என்னை அழைத்துப் போவதற்கு யாரும் தயாராக இல்லை. எனக்குத் தனியாக எங்கு போயும் பழக்கமில்லை. இந்த நிலையில் அக்கம் பக்கத்தவரில் யாருடைய துணையையேனும் நாடலாமென்றால் அதற்கும் அவர்கள் என்னை விடுவதாக இல்லை. 'ஏன்? நாங்கள்ளாம் உன்னை அழைத்துக் கொண்டு போக மாட்டோம்னு சொல்லி அவங்க ஒத்தாசையை நாடப் போறியா? காலையிலே பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லி விட்டார்கள். கடைசியில் நான் யாரையும் பொருட்படுத்தாமல் என் கையில் இருந்த காசுடன் ஒரு டாக்சியில் யாருடைய துணையும் இல்லாமல் தனியாகவே ஆஸ்பத்திரிக்குப் போனேன்.

இரவில் தகப்பனாருடன் யாரேனும் துணை இருக்க வேண்டுமே என்ற உணர்வு கூட இல்லாமல் வீட்டுக்கு வந்துவிட்ட அவர்களை நினைத்து நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். நான் போன நேரத்தில் அவர் தூங்கிக்கொண்டிருந்தார். சுமார் பன்னிரண்டு மணிக்குக் கண் விழித்தார். பேசக் கூடாது என்று டாக்டர் கூறியிருந்தார். ஆனால், நான் எவ்வளவு தடுத்தும் கேளாமல் அவர் மனம் விட்டு என்னுடன் பேசினார்.

"அஞ்சுகம்..! நீ என்னிக்குமே மனசு விட்டு எங்கிட்டப் பேசினது கிடையாது. ஆனா எல்லாம் எனக்குத் தெரியும். எனக்குப் பொஞ்சாதியா வாழ்க்கைப்பட்டு நீ எந்த சுகத்தையும் காணல்லே. உனக்குன்னு ஒரு குழந்தை கூடப் பொறக்கல்லே. என் கொழந்தைங்களும் உன்னை மனுஷியா நடத்தல்லே. உங்கிட்ட நான் அதைப் பத்திப் பேசல்லியே தவிர எனக்கு எல்லாம் தெரியும். ஆனா ரொம்ப லேட்டாத்தான் நான் அதுங்க உன்னைப் படுத்தி வைச்ச பாட்டைத் தெரிஞ்சுக்கிட்டேன். எப்படித்தெரிஞ்சுக்கிட்டேன்னு உனக்கு ஆச்சரியமா யிருக்கும். ஒரு நாளைக்கு ரவியும் ரமாவும் பேசிக்கிட்டிருந்ததைக் கேட்டேன். அவங்க உன்னைப் படுத்தி வைச்ச பாட்டை யெல்லாம் சிரிக்கச் சிரிக்கக் கொடுமைக்காரங்க மாதிரிப் பேசிக்கிட்டிருந்ததைக் கேட்டு நான் கொதிச்சது உனக்குத் தெரியாது. அவங்களைப் பத்தி ஒரு நாள் கூட நீ புகார் செய்தது கிடையாதுங்கிறதை நினைச்சு நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். நீ எவ்வளவு சாது, நல்லவங்கறதெல்லாம் அன்னிக்குத்தான் எனக்குத் தெரிஞ்சிச்சு. உடனே நான் செய்த முதல் காரியம் என்ன தெரியுமா? எல்லார் பேருக்கும் எழுதி வெச்சிருந்த உயிலை மாத்தி எல்லாத்தையும் உன் ஒருத்தி பேருக்கே எழுதி வைச்சுட்டேன்..."

எனக்குச் சட்டென்று கண்ணீர் பெருகி வந்தது. "உயில் கியில்னெல்லாம் பேசாதீங்க. இப்ப என்ன வந்திருச்சு உங்களுக்கு? நாளைக்கே எழுந்திருச்சு உட்கார்ந்து பழையபடி சாப்பிடப் போறீங்க. பாருங்க நான் சொல்றேன்னு. எனக்கு எதுக்குங்க பணமும் காசும்? ஏற்கெனவே எல்லோரும் பணத்துக்காகத்தான் உங்களைக் கட்டிக்கிட்டேன்னு வாய்க்கு வாய் சொல்லிக் காட்டிக்கிட்டிருக்காங்க. தயவுசெய்து அப்படி ஏதும் செய்தி

டாதிங்க. எல்லாரும் என்னைக் கரிச்சுக் கொட்டிடுவாங்க...'' என்று நான் அழுதேன்.

''அழாதே, அஞ்சுகம்! நான் செத்துப் போயிட்டா நீ இவங்க யாருகிட்டவும் போய் இருக்காதே. உன்னை வேலைக்காரியாக வெச்சுக்குவானுங்க. அப்பாவுடைய சம்சாரம், நம் சித்தி என்று நடத்தமாட்டானுங்க.''

''வேணுங்க. அந்தப் பேச்சே பேசாதீங்க. உங்களுக்கு ஒண்ணும் வராது....''

'...ஏய், ரமா! பணப் பிசாசுன்னுத் தெரியுமாடி? அதுதான் பணத்துக்கு ஆசைப் பட்டு என்ன வேணும்னாலும் செய்யுமாம். வயசானவனைக் கண்ணாலம் கட்டிக்கிடுமாம்' என்ற பதினைந்து வயசு ரவியின் பின்னைக் குரல் திடீரென்று என் செவிகளில் ஒலிக்கிறது. அன்று முழுதும் நான் கண்ணீர் சிந்திக் கொண்டிருந்ததும் நினைவுக்கு வருகிறது.

கடைசியில் அவர் நினைத்தபடிதான் நடந்தது. என்னைப் பிழியப் பிழிய அழ வைத்துவிட்டு அவர் போய்ச் சேர்ந்தார்.

ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு வந்து சுமார் இரண்டு வாரங்கள் கழித்துத்தான் அவரது மறைவு நேர்ந்தது; எதிர்பாராத வகையில் சட்டென்று நேர்ந்தது....

அவர் சொன்னவாறே உயில் எழுதி வைத்திருந்த உண்மை அவருடைய இறுதிச் சடங்குகள் யாவும் நடந்து முடிந்த பின்னர் வெளியாயிற்று. குடும்ப வக்கீல்தான் வீட்டுக்கே வந்து உயிலைப் படித்துக் காட்டினார். நான் வழக்கம்போல் அடுக்களைக்குள் இருந்தேன். கதவு இடுக்கின் வழியே பார்த்தபோது ரவி கால் மேல் கால் போட்டுக் கொண்டு சொத்தின் பெரும் பகுதி மூத்த மகனை தனக்குத்தான் இருக்கும் என்று எதிர்பார்ப்பவனுக்குரிய தோரணையுடன் உட்கார்ந்திருந்தான். மூத்தவனும் அப்படியே சிரிப்புடன் உட்கார்ந்திருந்தான். மற்ற எல்லோருமே சொத்து முழுதும் அப்பாவினால் சமமாகப் பங்கிடப் பட்டிருக்கும் என்பது போல் உட்கார்ந்திருந்ததாய்த் தோன்றியது. கடைசியில் வக்கீலையா அந்த வெடிகுண்டை எடுத்து வீசிப் போட்டபோது ஒருவர் முகத்திலாவது ஈயாடவில்லை.

அவர் தமது சொத்துக்கள் எல்லாவற்றையும் — அவை தாமே சொந்த முயற்சிகளால் சம்பாதித்தவை என்ற காரணம் பற்றி—தம் விருப்பம்போல் அவற்றைப் பங்கிடத் தமக்கு முழு உரிமையும் உண்டு என்று பீடிகை போட்டுவிட்டு என் பெயருக்கே எழுதி வைத்திருந்தார். நான் இறந்ததன் பிறகு—நான் என் விருப்பம் போல் எப்படி வேண்டுமானாலும் — எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்தது போக மீதியாவதைத் தம் குழந்தைகள் அனைவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்றும் கூறியிருந்தார். நான் மீதப்படுத்தாமல் செலவு செய்தால் அதில் குற்றம் காணத் தம் மக்களுக்கு எவ்வகை உரிமையையும் தாம் அளிக்கவில்லை என்றும் அவர் அதில் திட்டவட்டமாக அறிவித்திருந்தார். வக்கீல் அதைப் படித்துமுடித்ததும் எனக்கே தலை சுழன்றது. ஐம்பதினாயிரம் ரொக்கம்.... பணத்துக்காகவே நான் அவரை மணந்ததாக அவர் குழந்தைகள் அடிக்கடி ஜாடைமாடையாக என் காதுபடப் பேசிய குத்தல் பேச்சுக்கள் யாவும் செவிகளில் ஒலித்தபோது என் உடம்பு குறுகிப்போயிற்று. 'அப்பாவுக்கென்ன பைத்தியம் கியித்தியம் பிடிச்சிருந்திச்சா என்ன?' என்ற மூத்தவனின் வெறுத்த பேச்சும், 'அதானே?' என்ற ரவியின் ஆமோதிப்பும் எனக்குக் கேட்கவே செய்தன.

நான் என்னையும் அறியாமல் அடுக்களையை விட்டு வெளியே வந்தேன். ''வக்கீலையா! அந்தப் பணத்திலே ஒரு சல்லிக் காசுகூட எனக்கு வேண்டாங்க. ஒவ்வொரு பெண்ணும் ஆசைப்படற குடும்ப வாழ்க்கைக்கு ஆசைப்பட்டுத்தான் நான் அவரைக் கட்டிக்கிட்டேனே ஒழிய அவருடைய பணத்துக்கு ஆசைப்பட்டு இல்லீங்க. எல்லாப் பணத்தையும் அவங்களுக்குள்ளே பங்கு போட்டு நான் கொடுக்கிறதாய் மறுபடியும் ஓர் உயில் எழுதிப் போடுங்க. நான் கையெழுத்துப் போட்டுத் தாறேன்......'' என்று அறிவித்துவிட்டு அடுக்களைக்குத் திரும்பினேன்.

அவர்கள் எல்லோரும் அமர்ந்திருந்த அந்தப் பெரிய அறையில் சட்டென்று நிலவிய அமைதி பொருள் பொதிந்ததாகவும், இத்தனை ஆண்டு காலமாக என்னை அவர்களுக்கு நிரூபித்துக் காட்ட முடியாமல் துன்பப்பட்டுக் கொண்டிருந்த எனக்கு அமைதி அளிப்பதாகவும் இருந்தது.



அடுத்த இதழில்...

ஜேசுதாஸ் — பேட்டி

போட்டிக்கதை: ஓடிப்போனவள்! — ஷி. ஹென்றி

பஸ்ஸில் முல்லா!

பஸ் பயணம் அசதியாயிராமல் ஆனந்தமாய் மாறும்!





# உங்கள் அன்பின் பிரதிபலிப்பு

# இந்து ரோல் பிலிமில்

உங்கள் காமிரா எந்தத் தயாரிப்பாக இருந்தாலும், நீங்கள் எடுக்கப் போவது எவ்வித புகைப்படமாக இருந்தாலும், இந்து ரோல் பிலிமையும், புரோமைட் பேப்பரையுமே பயன்படுத்துங்கள்.

காரணம், ஒரு நல்ல ரோல் பிலிமும் புரோமைட் பேப்பரும் அளிக்க வேண்டிய எல்லாப் பயன்களையும் இந்து அளிக்கிறது. தெளிவான மாறுபாடு, சிறப்பான ஒளிப்பதிவு, ஒரே சீரான தரம், நுல்லியமான கிரெயின்கள் இவற்றை அளிப்பது இந்து. அதுமட்டுமல்ல, இந்து மிக எளிதில் கிடைக்கிறது. எனவே உங்கள் அன்பின் பிரதிபலிப்பை காண இந்துவை நாடுங்கள்.

**இத்துறையில் தன்னிறைவு பெற, தன்னிகரற்ற சேவையில் இந்து அளிப்பவை:**

இந்து ரோல் பிலிம். இந்து போட்டோகிராபிக் பேப்பர்கள். இந்து சினி பாஸிடிவ. இந்து சினி சவுண்ட் நெகடிவ். இந்து எக்ஸ்ரே பிலிம். இந்து மீடியம் கான்ட்ராஸ்ட் கிராபிக் ஆர்ட்ஸ் பிலிம். இந்து டயாபாஸிடிவ். இந்து டாகுமெண்ட் காபியிங் பேப்பர்

## இந்துவின் தரத்திற்கு சான்று உங்கள் கண் எதிரே.




**இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ் மான்யுபாக்சரிங் கோ. லிமிடெட்,**

(இந்திய அரசின் ஒரு நிறுவனம்)
இந்துநகர், உதகமண்டலம் 643 005

SAA/HPFI/1911




ஒரிஸ்ஸாவில் உள்ள பாலஸோருக்கு 130 கிலோமீட்டர் கிழக்கே வங்காள விரிகுடாவில் 2170 மீட்டர் ஆழத்தில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இச்செய்தி பாரத மக்களின் காதுகளிலே தேனாக வந்து பாய்ந்துள்ளது எனின் மிகையன்று. அரபு நாடுகள் பெட்ரோல் விலையை மும்மடங்காக உயர்த்திவிட்டதுடன் மேலும் விலையை உயர்த்திவிடக் கூடிய சாத்தியக்கூறுகள் உள்ள நிலையில், கடலுக்கடியில் வங்காள விரிகுடாவில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டதை மத்திய அமைச்சர் திரு கே. டி. மாளவியா 'பிலியன் டாலர் செய்தி' எனக் குறிப்பிட்டு மகிழ்ந்ததில் வியப்பில்லை.

தரையில் எண்ணெய் கண்டுபிடிப்பதற்கான ஆய்வுகள் நிகழ்த்துவது, கண்டுபிடிக்கப்பட்ட எண்ணெயை வெளிக் கொணருவது இவற்றைவிட, கடலில் இப்பணியில் ஈடுபடுவதில் சிக்கல்களும் சிரமங்களும் அதிகம். கடற்கரையிலிருந்து சுமார் 200 மீட்டர் தூரம் வரை கடலின் ஆழம் சிறிது சிறிதாகத்தான் அதிகரிக்கிறது. ஆனால் 200 மீட்டர் தூரத்துக்கு அப்பால் கடலின் ஆழம் திடீரென்று மிகக் கூடுதலாகி விடுகிறது. உலகின் எந்தப் பகுதியிலுமே கடலின் அமைப்பு இவ்வாறுதான் இருக்கும். கரையிலிருந்து 200 மீட்டர் தூரம் வரையிலான கடலின் இப்பகுதிக்கு 'காண்டினெண்டல் ஷெல்ஃப்' (Continental Shelf) எனப் பெயர். தேசப்பட (அட்லஸ்)த்தில் இப்பகுதி வெளிர் நீலமான வண்ணத்தில் காட்டப்பட்டிருக்கும்.

'காண்டினெண்டல் ஷெல்ஃப் எனப்படும் இந்த 200 மீட்டருக்கு உட்பட்ட கடற்பகுதியில்தான் எண்ணெய் கண்டுபிடிப்பதற்கான ஆய்வுகள் நிகழ்த்துகிறார்கள். கடலுக்கடியிலிருந்து எண்ணெய் எடுப்பதற்குக் கப்பலையே 'பிளாட்ஃபாரம்' மாதிரிப் பயன்படுத்துகிறார்கள். கப்பலில் இத்துறையில் பணியாற்றிய விஞ்ஞானி ஒருவர் தரும் தகவல்கள் சுவையானவை.

கப்பலின் நான்கு பக்கங்களிலும் நான்கு கால்களைக் கடலுக்குள் அடிப் பகுதி வரை செலுத்துகிறார்கள். கால்கள் கீழே இறங்க, இறங்கக் கப்பல் மேலே எழும்புகிறது. மோட்டார் காரின் அடிப் பகுதியில் பழுது பார்க்கும் போது 'ஜாக்' மூலம் காரை மேலே தூக்குகிற மாதிரிக் கப்பலை நீர்மட்டத்துக்கு மேலே எழும்பச் செய்யும் இந்த முறைக்கு 'ஜாக்-அப்-பிளாட்ஃபாரம்' (Jack-up-Platform) எனப் பெயர். கப்பல் மேலே எழும்பி வந்த பிறகு கப்பலையே மேடையாக அமைத்துக் கொண்டு கடலின் அடிவாரத்தைக் குடைகிறார்கள். கடலின் அடிப்பகுதியிலுள்ள மணல் 'பொல பொல' என்றும் இருக்கக் கூடாது; பாறையாகவும் இருக்கக் கூடாது. கால்கள் பதிந்து நிற்கப் போதிய உறுதி அளிப்பதாக இருந்தால்தான் முடியும். கால்களின் நீளம் சுமார் 300 அடி இருக்கும். தரைக்கு அடியில் 20 மீட்டர் பதிந்து நிற்கும். இம்முறையில் 200 அடி ஆழம் வரை குடைவது சாத்தியம். 'சாகர்', 'சாம்ராட்' என்ற பெயருள்ள எண்ணெய், இயற்கை வாயுகமிஷன் (ONGC) துறையினருக்குச் சொந்தமான கப்பல்கள் இம்முறையில் குடையப் பயன்படுத்தப்படுகின்றன. ஒரு முறை 'ஜாக்' செய்து கப்பலை உறுதியாக நிறுத்திவிட்டால் மழை, காற்று ஆகிய எந்தப் பருவ நிலையிலும் தொடர்ந்து குடையலாம். கடல் கொந்தளிப்பு மிகுதியாக இருந்தால் வேலை செய்வது கடினம். கடலின் ஆழம் 300 அடிக்கு மேல் இருந்தால் 'ஜாக் அப்' செய்வது சிரமம்.

கப்பல் பாதி அளவு கடலில் மூழ்கிய நிலையில் குடைவது ஒரு முறை. இதற்கு நார்வே நாட்டுக் கப்பல் ஒன்று பயன்படுத்தப்பெறுகிறது. இக்கப்பல் மிகப் பெரியது. செலவும் கூடுதல். ஆனால் பருவ நிலை எவ்வளவு பாதகமாக இருந்தாலும் வருடம் முழுவதும் இக்கப்பலிலிருந்து குடைய முடியும். ஆழம் அதிகமாக இருந்தாலும் இதிலிருந்தவண்ணம் குடைய இயலும். இவை அனுகூலமான அம்சங்கள்.

இவ்விரண்டினின்றும் வேறுபட்ட மூன்றாவது வகை ஒன்றும் குறிப்பிடத்தக்கது. கப்பலை எட்டுத் திசைகளில் நங்கூரம் பாய்ச்சி நிலை நிறுத்துகிறார்கள். கப்பல் சாதாரணமாகக் கடலில் மிதந்தவண்ணம் இருக்கும். ஆனால் ஆடாமல் அசையாமல் இருந்த இடத்திலேயே இருக்கும். இம்முறையில் குடைய ஒரு பிரிட்டிஷ் கப்பல் பயன்படுத்தப்பெறுகிறது. இதற்குச் செலவும் சற்றுக் குறைவுதான். நங்கூரம் பாய்ச்சுவதற்கேற்பக் கடலின் அடிப் பகுதி அமைந்திருந்தால்தான் இக்கப்பலின் மூலம் குடைவது சாத்தியம்.

இவ்விதம் கடலில் மேடை அமைத்த பிறகு குடைவது நிலத்தில் குடைகிற மாதிரியேதான். ஆனால் கடலில் பணியாற்றும்போது மணல், சிமெண்ட், இரசாயனப் பொருட்கள் போன்றவற்றைக் கப்பலுக்கு எடுத்துச் செல்லப் பல 'சப்ளை' கலங்கள் தேவைப்படுகின்றன. இப்பொழுது அமெரிக்காவிலிருந்து ஒன்றும் பிரான்ஸிலிருந்து ஒன்றுமாக இரு சப்ளை கலங்கள் இயங்கி வருகின்றன. நிலத்



# பொருத்தம்

- ஹேமாமாலினி, கஸ்தூரி, ஜெயந்தி ஆகியோரிடையே கோபி.
- காட்சிக்குக் காட்சி மாறிய புடவைகளுக்கு நல்ல வாய்ப்பு, நடிப்புக்குத்தான் வாய்ப்பில்லை!

கோபி தியேட்டர்ஸின் இந்நாடகத்தில் ஒன்றுக்கொன்று பொருந்தாத சம்பவங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. (அதனால்தான் இந்தத் தலைப்போ!) சம்பிரதாயமான, பெரியோர்களால் நிச்சயிக்கப்படும் விவாகத்தை எதிர்த்து நிற்கும் கோபி, தன் தகப்பனாரின் விருப்பத்துக்கு விரோதமாகத் தான் காதலித்தவளையே மணந்துகொள்ளத் தீர்மானிக்கிறான். அவன் அருமை நண்பன் மதுவின் திருமணம் நிச்சயமாகி முகூர்த்தம் முடிந்த தினத்திலேயே அவன் உயிரும் முடிந்து விடுகிறது. மதுவின் மனைவிக்கு (விதவைக்கு) மறுவாழ்வு அளிப்பதாகக் கோபி அவளுக்கு வாக்குறுதி அளிக்கிறான். ஆனால் தன் காதலியைத்தான் மணக்கிறான். (இது என்ன பொருத்தம்!) கோபியின் மனைவி பிரசவத்தில் இறந்து விடுகிறாள். குழந்தையும் இறந்துவிடுகிறது. கடைசிக் காட்சியில் தந்தை தம் விரோதத்தையே மறந்து மகனைக் காண வருகிறார். சோதிடத்தில் நம்பிக்கை வைப்பது மூடத்தனம் என்கிறதா இந்த நாடகம்? இல்லை, சோதிடத்தை நம்ப வேண்டும் என்கிறதா? ஒரு நாடகத்தை மேடை ஏற்றுவதற்கு முன்பு மூலக் கதையின் கருத்தைக் கவனிக்க வேண்டும். ஒன்று, பழமையை எதிர்க்க வேண்டும், அல்லது ஆதரிக்க வேண்டும். வெந்நீரும் இல்லாமல், தண்ணீரும் இல்லாமல் இது என்ன நாடகம்?

இன்றைன்று, நகைச்சுவை என்று சொல்லிக்கொண்டு என்னத்தை யெல்லாமோ மேடையில் பேசித் தாங்களே சிரிக்கும் கெட்ட வழக்கத்தை நாடகக் கலைஞர்கள் உடனடியாக விட்டொழிக்க வேண்டும்!

வி. கோபாலகிருஷ்ணன் (கோபி) மேடை நாடக அநுபவமும் திரைப்பட அநுபவமும் மிக்க ஒரு நல்ல நடிகர். போதாக் குறைக்கு, மேல் நாடுகள் பலவற்றுக்கும் சென்று நாடகக் கலையின் வளர்ச்சியை நன்கு ஆய்ந்து அறிந்தவர். அவர் போய், இந் நாடகத்தில் பங்கேற்பது என்றால் அது என்ன பொருத்தம்? ''பொருத்தம்'' நாடகத்தின் பொருத்தமற்ற கதையம்சம் அவரையே பதம் பார்த்துவிட்டதே!

-காந்தன்

தில் எண்ணெய் இருக்கும் இடத்தைக் கண்டறிய ஸைஸ்மிக் (*Seismic*) சர்வே ஜியோலாஜிகல் சர்வே இப்படிப் பல சர்வேக்களைப் பூர்வாங்கமாக நிகழ்த்த வேண்டும். இதற்கு நிலத்தில் 'டியோடோலைட்' போன்ற பல கருவிகளைப் பயன்படுத்துகிறார்கள். இவற்றைக் கடலில் பயன்படுத்த இயலாது. ராடார் அடிப்படையில் நிகழ்த்தப்பெறும் விசேஷ ஆய்வு 'ஷோரான்' (*Shoran*) முறை எனப்படுவதாகும். இதுதான் பொதுவாகவும் பரவலாகவும் உலகில் பயன்படுத்தப்பெறும் முறை (*Shoran Radio Navigation System*).

பம்பாய்க் கடற்கரையில் எண்ணெய் கண்டுபிடித்ததில் பாரத எண்ணெய், இயற்கை வாயு கமிஷனின் நிபுணர்களும் உபகரணங்களுமே முற்றும் பயன்படுத்தப்பட்டன. வங்காளக் கடலில் 'கார்ல்ஸ்பார்க்' என்ற அமெரிக்க நிறுவனத்துக்கு 'காண்ட்ராக்ட்' வழங்கப் பெற்றுள்ளது. கடலில் எண்ணெய் தேடிக் கண்டுபிடிப்பதில் நிலத்தில் ஏற்படாத ஆபத்துக்கள் பல நிகழக்கூடும். செலவும் கூடுதல். பண்டங்களையும் உபகரணங்களையும் சேகரித்துப் பாதுகாத்து வைப்பதும் எளிதன்று. நீருக்கடியில் குழாய்கள் அமைக்கும் சிரம சாத்தியமான வேலையும் வேறு இருக்கிறது. எண்ணெய் இருக்கிறது என்று கண்டறிந்த பின்னரும், எண்ணெய்க் கிணறு அமைய வேண்டிய சரியான இடத்தைக் கண்டுபிடிப்பதும் கஷ்டமான பணியே. இவையெல்லாவற்றையும்விட முக்கியமான ஒரு பிரச்னை, கடலில் எண்ணெய் கண்டுபிடித்து வெளிக் கொணரும் பணிக்கு அந்நியச் செலாவணியும் கணிசமாகத் தேவைப்படுகிறது.

கடலில் மூழ்கி நல் முத்தெடுத்து வெற்றி கண்ட நாம், இன்று எண்ணெயும் கண்டுபிடித்துவிட்டோம். கரும் பொன் வளம் கொழிக்க இயற்கை அன்னை துணை புரிய வேண்டுவோம்.

—பாணன்

கடைசிப்பக்கம்

# கண்ணதாசன்



## அதன் பெயர் லட்சியம்

அலைகடலில் அந்தக் கப்பல் மிதந்து கொண்டிருந்தது.

ஆறு மாத காலமாகவே அது மிதந்து கொண்டுதான் இருந்தது.

கருங் கடலில் இருப்பதாகக் கருதப்பட்ட ஒரே தீவைக் கண்டுபிடிக்க அது போய்க் கொண்டிருந்தது.

அந்தத் தீவு மட்டும் கண்டுபிடிக்கப்பட்டு விட்டால், அந்தக் கப்பலில் பயணம் செய்த இருநூறு பேருக்கும் வளமான ஒரு நாடே கிடைத்துவிட்டதாக அர்த்தம்.

கப்பல் தலைவன் கெட்டிக்காரன்; நம்பிக்கைக்குரியவன்.

அப்படி ஒரு தீவு இருப்பதை அறிந்தே அவன் பயணம் தொடங்கியிருந்தான்.

வாழ வழி இல்லாதவர்கள் இருநூறு பேருக்கு வளமான வாழ்வை உருவாக்குவதே அவன் திட்டம்.

அதற்கென அவன் குறித்த இலக்கே அந்தத் தீவு.

பல வகைக் கடல்களையும் தாண்டிக் கப்பல் போய்க் கொண்டிருந்தது.

கடல் கொந்தளிப்பினாலும், பருவக் கோளாறினாலும், 'மூன்று மாதங்களில் அடையலாம்' என்ற கணக்குத் தவறிவிட்டது : ஆறு மாதங்கள் ஓடிவிட்டன.

தேவைக்கெனச் சேமித்து வைத்திருந்த உணவுப் பொருட்களும், வசதிகளும் வெகுவாகக் குறையத் தொடங்கின. ஒருநாள் அவை அறவே இல்லாமற் போய்விட்டன.

கப்பல் தலைவனோ பசியையும், தூக்கத்தையும் பொருட்படுத்தாமல் சுக்கானைப் பிடித்தபடி இருந்தான்.

பயணம் செய்தவர்களுக்குப் பசி எடுக்க ஆரம்பித்தது.

'எப்படியும் நாம் அந்தத் தீவை அடைந்து விடுவோம்' என்று தலைவன் ஆறுதல் சொன்னான்.

அந்த ஆறுதலால் அவர்கள் பசி அடங்கவில்லை.

'எங்களுக்குப் பசிக்கிறது ! பசிக்கிறது !' என்று அவர்கள் சத்தமிட்டார்கள்.

''நாம் விரைவில் அந்தத் தீவை அடைந்து விடுவோம்; அங்கே காய்களும், கனிகளும் கேட்பாரின்றிக் குவிந்து கிடக்கின்றன. பசிக் கொடுமையைக் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். கடலில் நிறைய மீன்கள் கிடைக்கின்றன. குறிப்பிட்ட இலக்கை அடையும்வரை அந்த மீன்களை மட்டுமே உணவாகக் கொண்டு நாம் வாழ்ந்துவிட முடியும். நிரந்தர இன்பத்துக்காகத் தாற்காலிகத் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள். நாம் ஒரு லட்சியத்தை நோக்கிப் பயணம் செய்கிறோம் என்பதை மட்டும் மறந்துவிடாதீர்கள். சோதனைகளைக் கட்டுப்பாட்டோடு சகித்துக் கொள்வதன் மூலம்தான் ஒளிமயமான எதிர்காலத்தை நாம் பெற முடியும்.

''உழுகின்ற காலத்தில் அரை வயிறுதான் கிடைக்கும்; சமயங்களில் கிடைக்காமலும் போகும். அறுவடைக்குப்பின் அற்புதமான சாப்பாடு கிடைக்கும். நாம், நமது லட்சியத்தை அடைகிற வரையில் தயவுசெய்து பொறுமையாக இருங்கள்.''

தலைவன் எவ்வளவோ கெஞ்சினான்.

ஆனால் அவர்களோ வெறும் மீனை மட்டும் சாப்பிட்டுக் கொண்டிருக்கத் தயாராயில்லை.

'' எங்களுக்கு இந்த உணவு அலுத்துப் போய் விட்டது. வேறு வகை உணவு வேண்டும்'' என்று கத்தினார்கள்.

அவர்கள் பொறுமையோடு இருக்கச் சக்தி அற்றவர்களானார்கள்.

எல்லோருமாகச் சேர்ந்து கப்பல் தலைவனை உதைத்தார்கள்; அடி தாங்காமல் அவன் மரணம் அடைந்தான்.

கப்பல் திக்குமுக்காடத் தொடங்கிற்று. திசை தடுமாறி ஓடத் தொடங்கிற்று.

பயணம் செய்தவர்களுக்குப் பசியை உணரத் தெரிந்ததே தவிர, கப்பலை ஓட்டத் தெரியவில்லை.

சூறவளியில் சிக்கிக் கப்பல் மூழ்கத் தொடங்கிற்று.

அவர்கள் தங்கள் தலைவனை எண்ணி அழத் தொடங்கினார்கள்.

என்ன செய்வது : அவன் இனி வரமாட்டான் !

கப்பல் மூழ்கி விட்டது : இனி அவர்களுக்குப் பசியே எடுக்காது.

ஃ ஃ ஃ

நம்பிக்கை வைத்து ஒருவனைப் பின் தொடரும்போது நீ அவசரக்காரனாக இருந்தால் அதுவரையில் பட்ட கஷ்டம் வீணாகி விடும்.

ஒட்டகத்தில் ஏறியவன் ஊர் போய்ச் சேரும் வரை அதைக் கொன்றுவிடக் கூடாது.

அரசாங்கக் கப்பலையும் ஒரு தலைமை ஓட்டிக் கொண்டிருக்கிறது.

ஆன்மீகக் கப்பலையும் ஒரு தலைமை ஓட்டிக் கொண்டிருக்கிறது.

குறிப்பிட்ட இலக்கை அடையும் வரையில் கொடுமைகளைத் தாங்கிக் கொள்வதே வெற்றிக்கு வழி.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput. Madras-600031. Editor: K. Rajendran

உனக்கு ட்ரூ
பிடிக்குமா?

யாருக்குதான்
பிடிக்காது?

ட்ரூ நீஸ். சிறந்த சிற்றுண்டி.
தேங்காய், பால், சர்க்கரை கலந்த
சுவைமிகுந்த பிஸ்கட்டுகள்.
விருந்தினர் விரும்புவர். விருந்தும்
சிறக்கும். உறவினரும்
நண்பர்களும் வரும்போது
தயங்காமல் தரலாம்.

இந்தியாவில் நவீனமான
தொழிலகத்தில் சுகாதார முறைபடி
தரமாக தயாரிக்கப்படுபவை.

ட்ரூ பிஸ்கட்டுகள்
மொறுமொறுப்பானவை.
புதுமணம் குன்றுமல்
ருசி மிக்கவை.




TRUE

ட்ரூ

-பகிர்ந்திட விரும்பும் தரமிகுசுவை



HT-AFP-8020

ஆரோபுட் பிரைவேட் லிமிடெட், ஆரோவில் — பாண்டிச்சேரி

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)